

# அம்ருதா


வேர்வி 12 கலசம் 144 | ஜூலை 2018 ரூ 25 | நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
Volume 12 Issue 144 | July 2018 Rs. 25 | A Monthly Magazine of Art, Literature and Social Criticism


ருவன் எம். ஜயதுங்க
எம். ரிஷான் ஷெரீப்
வண்ணநிலவன்
தேவதேவன்
ந. பெரியசாமி
டிசே தமிழன்
கால சுப்ரமணியம்
ரவிசுப்பிரமணியன்
அனோஜன் பாலகிருஷ்ணன்
கடற்கரய் மத்தவிலாச அங்கதம்
கருணாகரன்
அ. ராமசாமி
ஷங்கர்ராமசுப்ரமணியன்
வைதீஸ்வரன்

## நவீனத் தமிழ் அரங்கவியல்

# தொடரும் செயல்பாடுகள்

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



Rs. 140



Rs. 130



Rs. 170



Rs. 110



Rs. 200




Rs. 100



Rs. 80



Rs. 90



Rs. 90

**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 73387 57878, 94440 70000,
**மின்னஞ்சல்:** info.amrudha@gmail. com, **இணையதளம்:** www. amruthamagazine. com

வேள்வி 12 கலசம் 144



அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஜீலை-2018 விலை ரூ. 25





**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044 - 2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒமிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


# இந்த இதழில்


06 **வாக்குமூலம்**
ருவண் எம்.ஜயதுங்க, தமிழில்: எம்.ரிஷான் ஷெரீப்

08 **பின்நகர்ந்த காலம்**
வண்ணநிலவன்

13 **கவிதை**
தேவதேவன்

14 **காஞ்சித் தலைவி**
ந. பெரியசாமி

16 **ஸ்பெயின்**
டிசே தமிழன்

22 **பிரமிள் படைப்புகள்**
கால சுப்ரமணியம்

37 **கவிதை**
ரவிசுப்பிரமணியன்

38 **சிறுகதை**
அனோஜன் பாலகிருஷ்ணன்

44 **பாரதி விஜயம்: மறுப்பா அல்லது வெறுப்பா?**
கடற்கரய் மத்தவிலாச அங்கதம்

50 **கவிதை**
கருணாகரன்

52 **நவீனத் தமிழ் அரங்கவியல்**
அ. ராமசாமி

59 **கவிதை**
ஷங்கர்ராமசுப்ரமணியன்

62 **மாய வேலி**
வைதீஸ்வரன்

ஆசிரியர் பக்கம்

# ஆபத்தை விளைவிக்கும் அணை பாதுகாப்பு மசோதா!

பிரபு திலக்

'மாநிலத்தில் சுயாட்சி, மத்தியில் கூட்டாட்சி' என்ற தத்துவத்தை இந்தியாவுக்குத் தந்தது தமிழகம். இந்த முழக்கத்தை முன்வைத்து தமிழகம் பெற்ற உரிமைகளால் தமிழகம் மட்டுமல்ல மற்ற மாநிலங்களும் பயன்பெற்றன. இப்படி போராடி பெற்ற உரிமைகள் ஒவ்வொன்றாக தற்போது பறிபோய் கொண்டிருக்கின்றன. மாநில சுயாட்சியின் மீது மத்திய அரசு நடத்தும் தொடர் தாக்குதல்களில் கடைசியாக வந்துள்ள அம்பு, அணை பாதுகாப்பு மசோதா!

காவிரியில் தமிழகத்தின் உரிமையை நிலைநாட்ட 50 ஆண்டுகளாக தமிழகம் நடத்திய சட்டப் போராட்டம் தற்போதுதான் முடிவை நோக்கி நகர்வது போல் தெரிகிறது. காவிரி நதிநீர் பங்கீடு வழக்கில் உச்ச நீதிமன்றம் வழங்கியுள்ள இறுதித் தீர்ப்பால் தமிழகத்துக்குக் கிடைக்க வேண்டிய நீரின் அளவு குறைகிறது என்றாலும், அதுவாவது கிடைத்தால் சரி என்று ஏற்றுக்கொள்ளத் தயாராகிவிட்டார்கள் தமிழக விவசாயிகள். அதனையும் தரமாட்டோம் என்று காவிரி மேலாண்மை ஆணையத்துக்கு அதிகாரிகளை நியமிக்காமல் கடுப்பேற்றி வருகிறது கர்நாடகம். இந்நிலையில், நீதிமன்றம் உறுதி செய்த அந்த உரிமையையும், இன்னொரு வழியாக தட்டிப் பறிப்பதுபோல் வந்துள்ளது அணை பாதுகாப்பு மசோதா.

இந்தியாவில் மொத்தம் 5,200 அணைகள் உள்ளன. இப்போது 400 புதிய அணைகள் கட்டுமானப் பணி நடந்துவருகிறது. இன்னும் பல்லாயிரம் சிறிய, நடுத்தர அணைகளும் உள்ளன. இந்த எல்லா அணைகளையும் பாதுகாக்க வேண்டும் என்று சொல்லி ஐக்கிய முற்போக்குக் முன்னணி ஆட்சியின்போதே இந்த மசோதா உருவாக்கப்பட்டது. பல்வேறு மாநிலங்கள் எதிர்ப்பு தெரிவித்தன. தமிழகம் கடுமையாக எதிர்த்தது.

தமிழ்நாடு ஆரம்பம் முதலே கடுமையாக எதிர்த்து வந்த, அதனாலேயே முந்தைய ஐக்கிய முற்போக்கு கூட்டணி அரசால் கிடப்பில் போடப்பட்ட, அணை பாதுகாப்பு மசோதாவுக்குத்தான் கடந்த 13 ஜூன் 2018 அன்று மத்திய அமைச்சரவை ஒப்புதல் வழங்கியிருக்கிறது.

இந்த மசோதாவின்படி இந்தியா முழுவதும் உள்ள அணைகள், நீர்த்தேக்கங்கள் மீதான மாநில அரசின் உரிமைகள் பறிக்கப்பட்டு மத்திய அரசின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுசெல்லப்பட இருக்கிறது. மட்டுமல்ல தமிழகத்தின் தண்ணீர் வளத்திலும் தட்டுப்பாடு வர இம்மசோதா காரணமாகும்.

முல்லைப் பெரியாறு, பரம்பிகுளம், பெருவாரிப்பள்ளம், துணைக்கடவு அணைகள் கேரளாவில் இருந்தாலும், இன்றைக்கும் அவை தமிழ்நாடு அரசின் கட்டுப்பாட்டில் இருக்கிறது. இந்த மசோதாவால் இந்த அணைகளின் மீதான நிர்வாக உரிமைகளையும் தமிழ்நாடு இழக்க நேரும். தமிழ்நாட்டின் கட்டுப்பாட்டு உரிமை நீக்கப்பட்டு இவை மத்திய அரசின் கீழ் கொண்டு செல்லப்படும். மேலும் மேட்டூர் அணையில் உற்பத்தி செய்யப்படும் மின்சாரத்தின் மீதான உரிமையும் தமிழ்நாட்டிற்கு இல்லாமல் கேள்விக்குறியாகப் போகும்.

இப்படி இந்த மசோதாவால் இந்தியாவிலேயே அதிகமாகப் பாதிக்கப்படப்போகும் மாநிலம் தமிழ்நாடுதான் என்பதால், அப்போதைய தமிழக முதல்வர் ஜெயலலிதா இந்த மசோதாவைக் கடுமையாக எதிர்த்தார். கடும் எதிர்ப்பு காரணமாக இந்த திட்டத்தை கிடப்பில் போட்டது ஐக்கிய முற்போக்கு கூட்டணி அரசு. 2014இல் நரேந்திர மோடி பிரதமரானதும் இந்த திட்டத்தை தூசி தட்டி செயல்படுத்த முனைப்பு காட்டினார். அப்போது, மீண்டும் கடுமையாக எதிர்த்த ஜெயலலிதா 2016ஆம் ஆண்டு செம்டம்பர் 11ஆம் தேதி பிரதமருக்குக் கடிதம் எழுதினார்.

அந்தக் கடிதத்தில், "முல்லைப் பெரியாறு அணையின் பராமரிப்பு தமிழகத்தின் பொறுப்பு என்று உச்ச நீதிமன்றம் 7.5.2014இல் வெளியிட்ட தீர்ப்பில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த நிலையில் முல்லைப் பெரியாறு அணையைப் பராமரிக்கும் பொறுப்பை வேறு மாநிலம் ஒன்றின் அணை பாதுகாப்பு அமைப்பிடம் ஒப்படைப்பது, ஆய்வு செய்ய அனுமதிப்பது, உச்ச நீதிமன்ற தீர்ப்புக்கு எதிரானது. அதுபோல மாநிலங்களின் அரசியல் அதிகார வரம்பை மீறும் வகையில் வரைவு மசோதா பல விதிகளை வகுக்கிறது. இத்தகைய தேவையற்ற சாகசவாத போக்கை மத்திய அரசு கைவிடவேண்டும்"என்று குறிப்பிட்டிருந்தார், ஜெயலலிதா.

தற்போதைய தமிழக முதல்வர் எடப்பாடி பழனிச்சாமியும் மத்திய அரசுக்கு எழுதியுள்ள கடிதத்தில், 'இந்த மசோதா மாநிலங்களின் உரிமையைப் பறிக்கும் செயல். எனவே, இம்மசோதாவை நிறுத்தி வைக்கவேண்டும்" என்று தெரிவித்துள்ளார்.

இப்படி எதிர்ப்புகள் வரும் என்று தெரிந்துதான்,



மசோதாவைக் கொண்டு வரும் முன், மசோதாவை மாநிலங்களுக்கு அனுப்பி கருத்துக் கேட்கும் அடிப்படை ஜனநாயகக் கடமையைக்கூட மத்திய அரசு நிறைவேற்றவில்லை. மாநிலங்களைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் தன்னிச்சையாகவே மத்திய அமைச்சரவை மசோதாவுக்கு ஒப்புதல் வழங்கியிருக்கிறது. இது அரசியல் சட்டத்தின் 262 ஆவது பிரிவின்படி அமைக்கப்பட்ட மாநிலங்களுக்கு இடையிலான நதிநீர் தாவா சட்டத்தின் குறிக்கோளுக்கு எதிராகும்.

மேலும், அணை பாதுகாப்பு மசோதாவின் முழு விவரங்களையும் மாநில அரசுக்குத் தெரிவிக்க வேண்டியது மத்திய அரசின் கடமை ஆகும். ஆனால், மூடு மந்திரமாக வைத்துக்கொண்டு, மத்திய அரசு இந்த மசோதாவைச் சட்டம் ஆக்கியுள்ளது.

கர்நாடகம் மீண்டும் அணை பாதுகாப்பு மசோதாவைப் பயன்படுத்தி, தமிழகத்திற்கு உரிமையான காவிரி நீரைக் கொடுக்காமல் இழுத்தடிக்கும். கர்நாடகா, கேரளா மட்டுமல்ல ஆந்திராவுடனும் நதிநீர்ப் பங்கீட்டு ஒப்பந்தங்கள் செய்துகொண்டுள்ள மாநிலம் தமிழகம். தமிழகத்திற்கு உள்ள இந்த உரிமை குறித்து அணை பாதுகாப்பு மசோதா என்ன சொல்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளக்கூட முடியாத அளவிற்கு, புதிய மசோதாவில் ரகசியமும் மர்மமும் பாதுகாக்கப்படுகிறது.

மத்தியில் ஆட்சியில் இருக்கும் பாஜகதான் இப்போது 20 மாநிலங்களில் ஆட்சியில் உள்ளது. எனவே அவர்கள் அணை பாதுகாப்பு மசோதாவுக்கு ஒப்புக்கொள்வார்கள். மற்ற மாநிலங்கள் வேறுவழியின்றி பணிய வேண்டிய நிலையே ஏற்படும்.

தண்ணீர் வளத்தைக் காப்பதற்காக என்று சொல்லி ‘அணை பாதுகாப்பு மசோதா’வை கொண்டு வருபவர்கள், தண்ணீர் வளத்தைப் பெருக்க இதுவரை என்ன செய்துள்ளார்கள்? பருவநிலை மாறுபாடு பாதிப்புகளை குறைக்க எந்த நடவடிக்கையும் எடுக்காத நாடுகளின் பட்டியலில் இந்தியா உள்ளது குறிப்பிடத்தக்கது.

மாநில உரிமை பறிபோகும் வேதனை ஒருபக்கம் இருக்க, தண்ணீரைத் தனியார் மயமாக்கும் முயற்சிதான் அணை பாதுகாப்பு மசோதா என்று எச்சரிக்கிறார்கள் சூழலியல் ஆர்வலர்கள். நிலத்தடி நீர் மேலாண்மை, பாசனம், விவசாயம், கொள்கைமுடிவு, நிர்வாகம் என அனைத்தும் இந்த அணைபாதுகாப்பு மசோதாவில் வருகிறது. இதன்படி இனிவரும் காலங்களில் புதிய அணைகளின் கட்டுமானத்தை தனியாரிடம் கொடுக்க வாய்ப்புள்ளது. தற்போது தனியார் நிறுவனங்கள் சாலைகள் போட்டு சுங்கச்சாவடிகளில் வசூல் செய்துகொள்வது போல, எதிர்காலத்தில் தனியார் நிறுவனங்கள் அணையைக் கட்டி, அதனை நிர்வகித்து, அந்த கட்டுமான, பராமரிப்பு செலவை அணையைப் பயன்படுத்துபவர்களிடம் வசூலித்துக்கொள்ளும் நிலை வரலாம். அப்படியெல்லாம் நடக்காது என்பதற்கு எந்த உத்தரவாதமும் இல்லை.

அணை பாதுகாப்பு மசோதாவின் மூலம் நீர் ஆதாரங்கள் மத்திய அரசின் கட்டுப்பாட்டிற்குள் செல்வதால், எளிமையாக மத்திய அரசு ஒட்டுமொத்த இந்தியாவின் நீர் ஆதாரங்களையும் வணிகப் பொருளாக மாற்றிவிட முடியும். தண்ணீர் என்பது உரிமையல்ல, அது பண்டம் என சொல்லும் உலக வணிக அமைப்பு ஒப்பந்தங்களின் அடிப்படையிலேயே அணை பாதுகாப்பு மசோதாவும் கொண்டு வரப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

அணை உரிமை பறிபோனால் அவற்றைச் சார்ந்துள்ள தமிழக ஆறுகளும் நிலமும் வறண்டுதான் போகும். ●

நினைவுகள்

# வாக்குமூலம்

ருவண் எம்.ஜயதுங்க
தமிழில்: எம்.ரிஷான் ஷெரீப்

யாழ்ப்பாண நூலகத்துக்குத் தீ வைத்த நபரொருவர் எனக்களித்த வாக்குமூலத்தை பல வருடங்களுக்குப் பிறகு நான் எழுதுகிறேன். இந்த நிகழ்வு குறித்து நான் தனிப்பட்ட பதிவேதும் எழுதவில்லை. எனினும், 2002ஆம் ஆண்டு என்னால் எழுதப்பட்ட எனது 'பிரபாகரன் நிரூபணம் குறித்த மனோவியல் ஆய்வு' எனும் தொகுப்பில் நான் குறிப்பிட்டிருக்கிறேன்.

இந்த நபரை, 1994ஆம் ஆண்டு நான் மாத்தளை வைத்தியசாலையில் கடமையாற்றிய காலத்தில் சந்தித்தேன். அவர் எனது பகுதி நேர நோயாளியாக இருந்தார். பகுதி நேர நோயாளி என நான் குறிப்பிடுவது ஏனெனில், அவருக்கு ஆரம்பத்திலிருந்து சிகிச்சையளித்த வைத்தியர் நானல்ல. எனினும், அவரது உடல் ரீதியான வியாதிகள் சிலவற்றுக்கு நான் சில வைத்திய அறிவுரைகளைக் கூறியிருந்ததாலும், அவருக்கு சில மருந்துகளை இலவசமாகக் கொடுத்ததாலும், அவர் எனக்கு சினேகமாகியிருந்தார்.

நான் இங்கு குறிப்பிடப் போவது அந்த நபர் என்னிடம் கூறியதைத்தான். இந்தத் தகவல்கள் உண்மையானவை, பொய்யானவை போன்ற விடயங்களை வாசகர்களின் தீர்மானத்துக்கு விட்டுவிடுகிறேன். (ஓய்வுபெற்ற சிரேஷ்ட போலிஸ் பிரதி காவலதிகாரி எட்வட் குணதிலகவால் முன்வைக்கப்பட்ட ‘ஆய்வறிக்கை’யின் பிரகாரம், யாழ்ப்பாண நூலகத்தை எரித்தது விடுதலைப்புலிகள் இயக்கத்தினரது செயல்பாடாகும். அதற்கு சிங்களவர்கள்தான் காரணம் எனக் காட்டி சர்வதேச மக்களின் அனுதாபத்தை வென்றெடுப்பதே அவர்களது நோக்கமாகும்.)

இந்த வாக்குமூலத்தை அளித்த நபரது உத்தியோகம் என்னவாகவிருந்தது என்பதை நான் கூறமாட்டேன். காரணம் அது சர்ச்சைக்குரியதாகவும், ஈழ ஆதரவாளர்களால் இந்த விடயமும்கூட அவர்களது பிரசார தந்திரமாகப் பாவிக்கப்படக்கூடும் என்பதனாலுமாகும். எவ்வாறாயினும், இந்தச் சம்பவம் நடைபெற்ற போது அவர் வடக்கில்தான் இருந்திருக்கிறார்.



ஒரு இலட்சத்துக்கும் அதிகமான புத்தகங்களோடு, ஆசியாவிலிருந்த விசாலமான நூலகங்களிலொன்றான யாழ்ப்பாண நூலகத்துக்கு 1981ஆம் ஆண்டு, மே மாதம் 31ஆம் திகதி தீ வைக்கப்பட்டது. அந்தக் கால கட்டத்தில் யாழ்ப்பாண அபிவிருத்திக் குழுத் தேர்தல் நடைபெற்றுக் கொண்டிருந்ததோடு, கொழும்பிலிருந்து சென்றிருந்த காடையர்கள் யாழ்ப்பாணத்தில் கலவரத்தை ஏற்படுத்தியவாறு இருந்தனர். இந்த நிகழ்வானது இனவாதக் கலவரங்களின் திருப்புமுனையாக அமைந்தது.

யாழ்ப்பாணத் தமிழர்களின் பெருமைக்குக் கொடுத்த அடியாகத்தான் யாழ்ப்பாண நூலகம் கொளுத்தப்பட்டதென அந்த நபர் கூறுகிறார். இதற்கு சில அரசியல்வாதிகளும்கூட அனுமதி அளித்திருக்கின்றனர். அதை நியாயப்படுத்தும் விதமாக, விடுதலைப் புலிகள் இயக்கத்தினர் இந்த நூலகத்தில் வைத்துத்தான் ஒருவரையொருவர் சந்தித்து தாக்குதல் திட்டங்களைத் தீட்டுவதாகவும், அதனால் அவர்கள் சந்தித்துக்கொள்ளும் இடங்களை அழித்தொழித்துவிட வேண்டுமெனவும் உத்தரவிடப்பட்டிருக்கிறது. அத்தோடு தமிழ் ஐக்கிய விடுதலை முன்னணியினரின் இறுதி பிரச்சாரக் கூட்டம் இடம்பெற்ற இடத்தில் கடமையில் ஈடுபட்டிருந்த போலிஸார் இருவரை தீவிரவாதிகள் கொலை செய்திருந்ததால் இந்தக் குழுவினர் அமைதியற்று இருந்திருக்கின்றனர்.

இந்த நபர் கூறும் விதத்தில், அவரும், அவருடனிருந்த குழுவினரும் முதலில் சாராய போத்தலொன்றில் பெட்ரோலும் மணலும் நிரப்பி, புடைவைத் துண்டால் மூடி அதனைக் கொளுத்திவிட்டு நூலகத்தை நோக்கி எறிந்திருக்கின்றனர். அந்த போத்தலுக்குள் சதுர வடிவில் வெட்டப்பட்ட இறப்பர் செருப்பின் துண்டொன்றும் இருந்ததனால் பலமாகத் தீ பற்றிக் கொண்டிருக்கிறது. இதற்கிடையே குழுவிலிருந்த ஒருவர் 'நெருப்பு நெருப்பு' எனக் கத்தியிருக்கிறார். அத்தோடு முன்பே திட்டமிட்டிருந்தவாறு ஒரு குழுவினர் தீயை அணைக்க தண்ணீரை எறிவதைப் போல பெட்ரோலையும், மண்ணெண்ணையையும் கொண்டிருந்த வாளிகளை தீயின் மீது எறிந்திருக்கின்றனர். அதனால், தீயானது கொழுந்து விட்டெரியத் தொடங்கியிருக்கிறது. நூலகத்திலிருந்த புத்தகங்களிலும் தீப்பிடித்துக் கொண்ட காரணத்தால் சொற்ப நேரத்துக்குள் யாழ்ப்பாண நூலகம் சாம்பலாகி விட்டிருக்கிறது. இருண்ட வானம் சிவந்து போயிருந்தது.

தீ, அதிக வெப்பத்தையும் கக்கிக் கொண்டிருந்ததனால், தீ வைத்தவர்கள் சற்றுத் தூரமாகச் சென்று இக்காட்சியைக் கண்டு களித்தவாறு மகிழ்ச்சி ஆரவாரம்

செய்து கொண்டு இருந்திருக்கின்றனர். இதற்கிடையே யாழ்ப்பாணத் தமிழ் மக்கள், நூலகத்துக்கு அருகில் ஓடி வந்து, தமது அக ஆன்மா எரிந்து கொண்டிருப்பதையும், அதற்குக் காரணமானவர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் எழுப்புவதையும் கண்டிருக்கிறார்கள்.

இந்த வாக்குமூலத்தைக் கொடுத்தவர் கூறுவதற்கேற்ப, தீ வைப்பதில் பங்குகொண்ட சிலர் சாராய போத்தல்களைக் கையில் வைத்துக்கொண்டு, அவற்றைப் பருகியவாறு இன ரீதியான கோஷங்களை எழுப்பியிருக்கிறார்கள். மது போதையில் விடுதலைப் புலிகள் இயக்கத்தினருக்கு சவால் விடுத்திருக்கின்றனர். பின்னர் போலிஸார் வந்து மிகவும் மென்மையாக அக்காடையர்களை அங்கிருந்து நீங்கிச் செல்லப் பணித்திருக்கின்றனர்.

மிகவும் அரிய கைப்பிரதிகளைக்கூடக் கொண்டிருந்த யாழ்ப்பாண நூலகம் அழிக்கப்பட்டதைக் குறித்து ‘கலாசார இனப்படுகொலை’ என பேராசிரியர் தயா சோமசுந்தரம் தெரிவித்திருக்கிறார். யாழ்ப்பாண நூலத்தை எரிக்க ராணுவ அதிகாரிகளின் ஒத்துழைப்பு இருந்ததாக நான் நினைக்கவில்லை. காரணம் ஜெனரல் வஜிர விஜேரத்ன, கர்னல் வைத்தியர் ரஞ் சன செனவிரத்ன போன்ற ராணுவ அதிகாரிகள்கூட யாழ்ப்பாண நூலகத்தின் உறுப்பினர்களாக இருந்ததோடு, அவர்கள்கூட இச்சம்பவத்தை வன்மையாகக் கண்டித்திருக்கிறார்கள். இந்தக் குற்றச் செயலைச் செய்ய காடையர்களைத் தூண்டிவிட்ட அரசியல்வாதிகள்தான் இதற்குப் பொறுப்புக் கூற வேண்டும்.

எவ்வாறாயினும், யாழ்ப்பாண நூலகத்தை எரித்த காடையர் குழுவிலிருந்த இந்த நபர் பின்னர் அதைக் குறித்து வருந்தத் தொடங்கியிருக்கிறார். அவரது ஒரே பிள்ளையும்கூட பதினாறு வயதாகும் முன்பு இறந்து விட்டிருந்தது. அதனால், வாழ்க்கை குறித்து வெறுப்படைந்திருந்த அவர் மதுபானத்திற்கு அடிமையாகியிருந்தார். அவரை நான் இறுதியாக 1995ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் சந்தித்தேன். இப்போது அவர் உயிரோடு இருக்கிறாரா, இல்லையா என்பதை நான் அறியேன். ●

"எம். ரிஷான் ஷெரீப்" <mrishanshareef@gmail.com>

---



ருவண் எம்.ஜயதுங்க: கவிதை, சிறுகதை, கட்டுரைகள் ஆகிய துறைகளில் சிங்களம் மற்றும் ஆங்கிலம் ஆகிய மொழிகளில் தனது பங்களிப்பை ஆற்றி வரும் ருவண் எம் ஜயதுங்க, இலங்கை ராணுவத்தின் மன நலப் பிரிவில் மருத்துவராக கடமையாற்றியவர். அத்தோடு இலங்கை சுகாதார அமைச்சின் புத்தளம் மாவட்டத்துக்கான மனநல உத்தியோகத்தராகவும் கடமையாற்றியவர். ஜோன் எப். கென்னடி, வேலுப்பிள்ளை பிரபாகரன் போன்ற தலைவர்கள் குறித்தும், மனநல மருத்துவம், சிறுகதைத் தொகுப்புகள் எனவும் சிங்களம் மற்றும் ஆங்கிலத்தில் நாற்பதுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ள இவர் தற்போது கனடாவில் வசித்து வருகிறார்.

தொடர்

# பின்நகர்ந்த காலம்

**வண்ணநிலவன்**

நான், ஆதம்பாக்கத்திலிருந்து மவுண்ட் ரோடு டி.வி.எஸ். கம்பெனிக்கு எதிரே இருந்த 'துக்ளக்' அலுவலகத்திற்கு, தினசரி சைக்கிளிலேயே சென்று வந்தது இரண்டு மாதங்களிலேயே அலுப்படைந்தது. அதனால், வீட்டிலிருந்து செயிண்ட் தாமஸ் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சைக்கிளில் சென்று, சைக்கிளை ஸ்டேஷனருகே இருந்த சைக்கிள் ஸ்டாண்டில் போட்டுவிட்டு, பழையபடி ரயிலில் மாம்பலம் சென்று, அங்கிருந்து மவுண்ட் ரோடு ஆஃபீஸுக்குப் பஸ்ஸில் சென்று வந்தேன்.

தேவதாஸ் பத்திரிகைகளில் ஏதாவது வேலை கிடைக்குமா என்றுதான் முயற்சித்தார். அதே சமயம் அரசு வேலைக்கும் முயற்சி செய்து வந்தார். அந்தச் சமயத்தில் லயனல் அந்தோணிராஜ் என்ற விக்கிரமசிங்கபுரத்து நண்பர் என்னைச் சந்தித்தார். எனது முதல் சிறுகதைத் தொகுப்பான 'எஸ்தர்' தொகுப்பை சில நண்பர்கள் சேர்ந்துதான் வெளியிட்டிருந்தார்கள். அந்த நண்பர்களில் லயனலும் ஒருவர்.

லயனலின் குடும்பம் மிகப் பெரியது. லயனலும் தா. மணி, தேவதாஸைப் போலவே தமிழ் எம்.ஏ. முடித்துவிட்டு வேலைக்கு முயற்சித்துக் கொண்டிருந்தார். விக்கிரமசிங்கபுரம்தான் அவருடைய சொந்த ஊர். அங்கே அவருடைய குடும்பத்துக்கு சொந்தமாக பள்ளிக்கூடம், கடை, வீடு எல்லாம் இருந்தது. லயனலின் அப்பா இறந்து விட்டிருந்தார். ஊரிலிருந்த பள்ளிக்கூடம், கடையை எல்லாம் லயனலின் மூத்த அண்ணன் கவனித்து வந்தார். அவரைத் தவிர இரண்டு அண்ணன்கள் சென்னையில் இருந்தார்கள். சென்னையில் இருந்த ஒரு அண்ணன் சினிமாவில் ஸ்டண்ட் நடிகராக இருந்தார். இன்னொரு அண்ணனான அல்லி, பெரம்பூரில் ரிஸர்வ் போலீஸில் கான்ஸ்டபிளாக இருந்தார். இவர் பெரம்பூர் போலீஸ் குவாட்டார்ஸிலேயே வசித்து வந்தார். அல்லிக்கும் லயனலுக்கும் மட்டும் திருமணமாகவில்லை. மற்ற அண்ணன்மார்களுக்கு எல்லாம் திருமணமாகிக் குழந்தைகளும் இருந்தனர்.

லயனல், ஆஜானுபாகுவாக இருப்பார். அவருடைய அண்ணன் அல்லி, லயனலைப் போலீஸிலேயே சேரச் சொன்னார். ஆனால், லயனலுக்கு அதில் இஷ்டமில்லை. அவரும் தேவதாஸைப் போல், பத்திரிகையில் வேலை கிடைத்தால் தேவலை என்று நினைத்தார். லயனலுக்கு என்னிடம் மிகுந்த பிரியமும் மரியாதையும் உண்டு. 'ஆனந்த விகடன்' பத்திரிகையில் சர்க்குலேஷன் பிரிவில் வேலை பார்த்த ஸ்ரீதரிடம் ஒருநாள் பேச்சுவாக்கில் லயனலையும் தேவதாஸையும் மனதில் வைத்துக் கொண்டு, "விகடனில் ஏதாவது வேலை கிடைக்குமா?" என்று கேட்டிருந்தேன். ஸ்ரீதர் 'பார்க்கலாம்யா' என்று சொன்னார்.

இரண்டு வாரம் கழித்து ஒரு நாள் மதியம், வழக்கம்போல் 'துக்ளக்' ஆபீஸுக்கு வந்து பேசிக் கொண்டிருந்த ஸ்ரீதர், என்னிடம், "யோவ்! விகடன்லே ஃப்ரூப் ரீடர் வேலைக்கு ஆள் தேடறாங்கய்யா. ஒம்ம ஃப்ரண்டு யாரோ இருக்கார்னு சொன்னீரே? அவரை அழைச்சுண்டு வாரும்" என்றார். ஒருவர் என்ன, இரண்டு தமிழ் எம்.ஏ.க்கள் அல்லவா கைவசமிருக்கிறார்கள். யாருக்குக் கிடைத்தாலும் சரி.

தேவாதாஸிடம் ஆனந்தவிகடனின் வேலையைப் பற்றிச் சொன்னேன். ஃப்ரூப் ரீடர் வேலையில் அவருக்கு ஆர்வமில்லை. லயனல், ஏதாவது வேலை கிடைத்தால் போதும் என்று இருந்ததால், அவர் சம்மதித்தார். அவரை என்னுடன் அழைத்துக் கொண்டு வந்தேன். ஸ்ரீதரிடம் லயனலை அறிமுகம் செய்து வைத்தேன். ஸ்ரீதர், ஆனந்தவிகடன் எடிட்டோரியலுக்கு லயனலை அழைத்துச் சென்று, விகடனின் துணை ஆசிரியராகவும் கார்ட்டூனிஸ்ட்டாகவும் 'பரணீதரன்,' 'மெரீனா' ஆகிய புனைபெயர்களில் விகடனில் எழுதி வந்தவருமான ஸ்ரீதரிடம் அறிமுகப்படுத்தினார். ஸ்ரீதருக்கு லயனலைப் பிடித்துப் போயிற்று. ப்ரூப் ரீடர் செக்ஷனில் ஏற்கெனவே மல்லி ஐயர், வெங்கட்ராமன் என்பவர்கள் நீண்டகால அனுபவத்துடன் பணிபுரிந்து வந்தனர். அன்றே அவர்களுடன் லயனல் அந்தோணிராஜூம் ஆனந்த விகடனின் ஃப்ரூப் ரீடரானார்.

அவ்வளவு சீக்கிரமாக லயனலுக்கு வேலை கிடைத்தது எனக்கு ஆச்சரியமாகவும் சந்தோஷமாகவும் இருந்தது. லயனல் என்னுடனே ஆதம்பாக்கத்தில் தங்கியிருக்க விரும்பினார். தேவதாஸுடன் லயனலும் எங்கள் குடும்பத்தில் ஒருவரானார்.



இந்நிலையில், தேவதாஸ் தான் இருப்பது எனக்குச் சுமை என்று நினைத்தார். நான் எவ்வளவோ சொல்லியும் கேட்கவில்லை. "ஊருக்கே சென்றுவிடுகிறேன்" என்றார். "எரிச்சநத்தம் ஒரு கிராமம். அங்கே இருந்து வேலை தேடுவது நடக்காத காரியம்" என்று நானும் லயனலும் தேவதாஸிடம் கூறினோம். தேவதாஸிடம் லயனல், "உங்களுக்கு இங்க



மனோகர்




இருக்கிறது சிரமமா இருந்தா, எங்க அண்ணன் அல்லிகூடப் பெரம்பூர்ல போயி இருங்க. அவன் குவார்ட்டஸ்ல தனியாத்தான இருக்கான்" என்றார். தேவதாஸுக்கு அந்த ஏற்பாடு பிடித்திருந்தது. பெரம்பூரில் போய் இருக்கச் சம்மதித்தார். ஒருநாள் தேவதாஸை அழைத்துக்கொண்டு போய், பெரம்பூரில் தனது அண்ணனிடம் சொல்லி, விட்டுவிட்டு வந்தார் லயனல்.

லயனலுக்கு இரண்டு ஷிஃப்ட்கள் மாறிமாறி வரும். அவர் அந்த வேலையைச் சந்தோஷமாகச் செய்தார். பகல்நேர வேலையாக இருந்தால் நானும் லயனலும் வீட்டிலிருந்து ஒன்றாகவே புறப்படுவோம்.

நான் 'துக்ளக்' பத்திரிகையில் வேலை பார்த்து வந்ததால், என்னால் எளிதில் யாரையும் பத்திரிகைகளில் ஏதாவது வேலையில் அமர்த்தி விட முடியும் என்று நண்பர்கள் நம்பினார்கள். குறிப்பாக, திருநெல்வேலி போன்ற தென் பகுதியிலிருந்து சென்னைக்கு வேலை தேடி வந்த ஒரு சில இளைஞர்கள் முடியும் என்று உறுதியாக நம்பினார்கள். ஆனால், உண்மையில் பத்திரிகை உலகில் எனக்கு எந்த இன்ப்ளுயன்ஸும் இல்லை. லயனலுக்கு விகடனில் வேலை கிடைத்தது தற்செயலானது.

தா. மணி, தேவதாஸ், லயனலுக்குப் பிறகு கோவில்பட்டியிலிருந்து மனோகர் என்ற இளைஞர் என்னைத் தேடிக்கொண்டு துக்ளக் அலுவலகத்திற்கு வந்தார். அவர் திருவல்லிக்கேணியில் தனக்கு இடம் தேடிக் கொண்டிருந்தார். திருவல்லிக்கேணியில் உள்ள ஒரு சந்தில் கவிஞர் ஞானக்கூத்தன் தங்கியிருந்த சரஸ்வதிக்கான நிலைய மாடியறை என் ஞாபகத்துக்கு வந்தது. 'கசடதபற' பத்திரிகை நண்பர்களெல்லாம் அந்த அறையில் அடிக்கடி கூடுவார்கள். திருவல்லிக்கேணி பகுதியில் மெஸ்களும் நிறைய உண்டு. அதனால், அந்தச் சரஸ்வதிக்கான நிலைய மாடியறையில் போய் தங்க இடம் கேட்கலாம் என்று மனோகரிடம் சொன்னேன். அதிர்ஷ்டவசமாக அங்கே மனோகருக்கு இடமும் கிடைத்தது. லயனலின் அதிர்ஷ்டம் அவருக்கு விகடனில் வேலை கிடைத்தது. அதுபோல் மனோகருக்கும் அதிர்ஷ்டம் இருந்தது. அதனால்தான் ஞானக்கூத்தன் அறையில் அவருக்கு இடம் கிடைத்தது.

மனோகர் நல்ல நடிகரும்கூட. நிறைய மோனோ ஆக்டிங் எல்லாம் செய்வார். அவராகவே முயற்சி செய்து மத்திய அரசின் விளம்பரத்துறையின் கீழ் இயங்கி வந்த 'Song And Drama Division' இல் முழு நேர நடிகராகப் பணிபுரிந்து வந்தார்.

என் மனைவி தொடர்ந்து ஆதம்பாக்கத்தில் டைப்ரைட்டிங் கற்று வந்தாள். இந்த நிலையில் அவள் கர்ப்பமும் அடைந்தாள். அவளுக்கு உதவிக்கு யாருமில்லை. அந்தக் காலத்தில் ஆதம்பாக்கத்தில் எந்த மருத்துவமனைகளும் இல்லை. நான் காலையில் போனால் இரவுதான் வீடு திரும்புவேன். என் மனைவியின் பெரியம்மா நந்தனத்தில் ஒரு வீட்டில் சமையல் வேலை செய்து வந்தார். ஸிட்டியில் வீடு இருந்தால் ஓய்வு நேரங்களில் அவர் வந்து என் மனைவியைப் பார்த்துக்கொள்ள முடியும் என்ற நிலை. இதனால், மறுபடியும் சென்னையிலேயே குடியேறுவது நல்லது என்று பட்டது.

தவிர, ருத்ரையாவும் தனது முதல் படத்தயாரிப்பு வேலைகளில் மும்முரமாக இருந்தார். அவரும் நான் ஸிட்டிக்குள் இருப்பதே அவருக்கு உதவியாக இருக்கும் என்று நினைத்தார். துக்ளக்கில் எனக்கு

வேலை வாங்கித் தந்த இயக்குநர் கே.பாலசந்தரின் உதவியாளரான அனந்து சாரும் ‘அதுதான் சரி’ என்றார்.

அனந்து சாரே எனக்காக வீடு தேடினார். மந்தைவெளியில் அவரது உறவினர் ஒருவர் இருந்தார். அவர் குடியிருக்கிற காம்பௌண்டில் ஒரு வீடு காலியாக இருந்தது. உடனே அந்த வீட்டைப் பேசி முடித்தார் அனந்து சார். பக்கத்தில் அடையாறு ஆந்திர மகிள சபா மருத்துவமனையும் இருக்கிறது. அங்கே என் மனைவியைக் காட்டுவது வசதியாக இருக்கும் என்று ருத்ரையாவும் அனந்து சாரும் முடிவு செய்தார்கள். மீண்டும் என் ஜாகையை சென்னை நகருக்கே மாற்றினேன்.


பா. செயப்பிரகாசம்


பூமணி

லயனல் தன் அண்ணன் அல்லியின் பெரம்பூர் குவாட்டர்ஸுக்கே போய்விட்டார். அங்கிருந்து விகடனுக்கு சைக்கிளில் வந்தார்.

மந்தைவெளி திருவள்ளூர் பேட்டையிலிருந்த அந்த வீடு மிகச் சிறியது. மூன்றடி அகலமுள்ள அடுப்பங்கரை. அதைத் தாண்டினால் எட்டடி அகலத்தில் ஒரு அறை. இளம் தம்பதியருக்குப் போதும். ஸிட்டிக்குள்ளேயே வந்துவிட்டதால் ஆஃபீஸுக்குச் செல்லும் பிரயாண நேரம் வெகுவாகக் குறைந்தது.

‘துக்ளக்’ மாதமிருமுறை பத்திரிகையாக இருந்ததால் ஒரு இதழுக்கும் அடுத்த இதழுக்கும் நடுவே பரபரப்போ நெருக்கடிகளோ இல்லாத நாட்கள் நான்கைந்தாவது இருந்தன. அந்த நாட்களில் நண்பர்களைச் சந்திப்பது, இலக்கியத்திற்காக நேரத்தைச் செலவிடுவது என்றிருந்தேன்.

நான் துக்ளக்கில் பணிபுரிந்தாலும் சென்னையிலுள்ள என் இலக்கியத் தொடர்புகளை விட்டுவிடவில்லை. தி.நகரில் உள்ள ‘பிரக்ஞை’ அலுவலகத்திற்கு சென்று ‘பிரக்ஞை’ நண்பர்கள் ரவிசங்கர், ரவீந்தரன், வீராச்சாமி என்ற ரங்கராஜன் எல்லோரையும் அடிக்கடி சந்தித்து வந்தேன். தி.நகர் செல்லும் போதெல்லாம் அசோகமித்திரன் வீட்டுக்கும் சென்று அவருடன் பேசிக்கொண்டிருப்பேன்.

ஒருநாள் ‘பிரக்ஞை’ அலுவலகத்தில் (எ.மகாலெட்சுமி தெரு) ரவிசங்கருடன் பேசிக்கொண்டிருந்த போது கண்ணன் என்பவர் மார்க்ஸிய வகுப்புகள் எடுக்க இருப்பதாகவும், முடிந்தால் அதற்கு வாருங்கள் என்றும் கேட்டுக்கொண்டார். இந்த விஷயத்தை லயனலிடமும் சொன்னேன். அவரும் வருகிறேன் என்றார். தினசரி மாலை ஆறு மணிக்கு கண்ணன் ‘பிரக்ஞை’ அலுவலகத்திற்கு வந்து வகுப்பெடுத்தார். சென்னையில் வேறு சில இடங்களிலும் அதுபோல் மார்க்ஸிய வகுப்புகள் நடந்து வந்தன.

அந்த வகுப்புக்களில் ரவிசங்கர், நான், பூமணி, பா. செயப்பிரகாசம், வீராச்சாமி,, லயனல், ரகு என்ற ரகுநாதன் எல்லோரும் கலந்துகொண்டோம். ஆறேழு நாட்கள் சென்ற பின் கண்ணன், ‘எல்லோரும் கட்சிக்கு லெவி கொடுக்க வேண்டும்’ என்றார். என்னால் பத்து ரூபாய்தான் கொடுக்க முடிந்தது. அதுவே எனக்குப் பெரிய தொகை அப்போது. கண்ணன் தன்னுடைய ஜோல்னாப் பையிலிருந்து ரொம்ப ரகசியமாக அச்சடிக்கப்பட்ட பிரதிகளை வழங்குவார்.

ஒருநாள் வீராச்சாமி, எல்லோரும் ஒரு ஞாயிற்றுக்கிழமை சிந்தாதிரிப்பேட்டையிலுள்ள கார்ப்பொரேஷன் பள்ளிக்கூடத்துக்கு வர வேண்டும் என்றார். அன்று கட்சியின் அறிக்கையை இறுதி செய்ய வேண்டும் என்றார். என்ன கட்சி, என்ன அறிக்கை என்று நினைத்துக்கொண்டே அந்த ஞாயிற்றுக்கிழமை அந்தப் பள்ளிக்கூடத்துக்குச் சென்றேன். பா. செயப்பிரகாசம், பூமணி, வீராச்சாமி இவர்களுடன் எங்களுக்கு முன்பின் அறிமுகமில்லாத பலரும் கூடியிருந்தனர். சுமார் அறுபது பேர் இருப்பார்கள்.

ஒரு அறிக்கையை வீராச்சாமி வாசித்தார். அதன் மீது பலர் கருத்துக்களைக் கூறினார்கள். ‘மக்கள் கலை இலக்கியக் கழகம்’ என்ற அமைப்பை ஆரம்பிப்பதென்றும், ‘புதிய ஜனநாயகம்’ என்ற பத்திரிகையைத் தொடங்கவேண்டும் என்றும் கூறப்பட்டது. மத்தியானம் இடைவேளை விடப்பட்டது. நான் யாரிடமும் சொல்லாமல் வீட்டுக்குப் போய்விட்டேன். எனக்கு அங்கே நடந்தது எதுவும் பிடிக்கவில்லை.

(தொடரும்)

**வண்ணநிலவன்** <ramachandran.u49@gmail.com>

# தேவதேவன் கவிதைகள்

9. மரணத்தறுவாயில் (1948 - 2018)

எனது நிறைவின்மை
இத்துணை லட்சம் ஆண்டுகளாகியும்
பாடுபட்ட பொன்னுலகைக்
காணாது போகிறோமே என்பதுதான்.

அதற்கான வரைபடங்களையும்
திட்டங்களையும் சாவிகளையும்
கொடுத்துவிட்டுத்தான் செல்கிறேன்
என்ற ஒரு நிறைவும் இருக்கிறது.

விடிந்தும் விடியாப் பொழுதாக
அடைந்தும் அடையாத வாழ்வையும்
வாழ்ந்தாகிவிட்டது.
அடைந்த வாழ்வின் பேரின்பத்தை
அடையாத வாழ்வைச் சுட்டும்
குறியீடாகவே சொல்லியாயிற்று.
காலமற்ற வெளியில் மலரக்
கருணை அளித்த
அழகிய ஆனந்த வாழ்வும்
அதுவே என்றும் சொல்லியாயிற்று.
பேரடங்கலோடே போகிறேன்
போகும்போதே அறிகிறேன்.
எனக்கு மட்டுமல்ல
தனிப்பெருங்கருணை ஒன்று
ஒவ்வொரு உயிரையும்
மரணத்தறுவாயில்
இவ்வாறே அணைத்துக்கொண்டு
செல்கிறது என்பதையும்.



10. கண்டுபிடித்தேவிட்டோமல்லவா அந்த உலகினை நாம்!

பறவைகளைவிட
விலங்குகளைவிட
மனிதர்களைவிட
இந்த அடர்வனத்திலே
உறவுநெருக்கம் மிக்கவர்களாய்
வாழும் எழில் உயிரிகள்
இந்தப் பாம்புகள்.

ஊர்ந்து செல்லும் இப்பாம்புகளும்
மரம் ஏறிநின்று
வானத்தைப் பார்க்க விழையும்.

தம் அழகினால் நம்பிக்கை பெற்று
விஷ உறுப்பைக் களைந்துவிட்டு உலவும்.

பறவைகளையும் விலங்குகளையும்
மனிதர்களையும் பார்த்து ரசிக்கும்
"பக்கத்திலே வராதே
எட்டநின்று பார்த்து ரசித்தாலே போதும்" என்று
தலைதூக்கிப் படம்விரித்துக் கூவும்.

விலங்குகளையும் மனிதர்களையும்விட
பறவைகளை மிகவும் நேசித்தபடி
மரத்தில் ஏறி
பறவைகளின் முட்டைகளை உண்பதன்மூலம்
அறிவிக்கும் தன் காதலை எல்லோருக்கும்.
பருந்து ஒரு பாம்பை
விண்ணில் தூக்கிப் பறந்து செல்வதும்
இதன் விழைவுதானா!
ஒன்றுமே குரூரமாக இல்லையா
இந்த உலகில்!
பிறக்கும் சிசுவின்
முதல் அழுகைக் குரல் போன்றதில்லையா
இவ்வுலகில் நாம் காணும் துன்பங்கள் எல்லாம்.
எல்லாம் எத்துணை அருமை என்பதில்லையா
இவ்வுலகின் பாடல்? ●

நாடக விமர்சனம்

# காஞ்சித் தலைவி

ந. பெரியசாமி

கி.பி. 600 முதல் 630 வரை மல்லையை (மாமல்லபுரம்) ஆண்ட மகேந்திர வர்ம பல்லவனால் எழுதப்பட்டது 'மத்த விலாச பிரஹசனம்' எனும் வடமொழி நாடகம். இதை தமிழாக்கம் செய்து, மறுவாசிப்புக்கு உட்படுத்தி, பிரளயன் இயக்கத்தில், 'காஞ்சித்தலைவி (அ) நவீன மத்த விலாச பிரஹசனம்' எனும் பெயரில், சென்னை கலைக் குழுவினர் மேடையேற்றினர். சென்னை, தி. நகர், பிட்டி தியாகராயர் அரங்கத்தில் இதன் மேடையேற்றம் நிகழ்ந்தது. இதே நாடகம் மீண்டும் வேலூர் மாவட்டம், திருப்பத்தூர் தூய நெஞ்சக் கல்லூரியில் நடந்த தேசிய நாடக விழாவில், கடந்த மே 30ஆம் தேதி நிகழ்த்தப்பட்டது.

பல நூற்றாண்டுகள் இடைவெளி இருந்தபோதும் இந்த நாடகம் சமகாலத்திற்கும் அச்சு அசலாக பொருந்திப் போகிறது என்பதுதான் இந்நாடக நிகழ்வின் சிறப்பு.

சத்திய சோமன் எனும் காபாலிகன், அவனது காதலி தேவ சோமை, புத்த பிக்கு நாக சேனன், பாப்ருகல்பன் எனும் பாசுபத சைவன், ஒரு மனநலங்குன்றியவன், ஒரு நாய் என ஆறு முக்கிய கதாபத்திரங்களின் வழியே நாடகம் நகர்கிறது.

மது, மாமிசம், மச்சம், மைதுனம் [கலவி], முத்ரா [வறுத்த பயறு வகைகள், தானியங்கள்] போன்றவற்றை பஞ்ச 'ம'காரங்கள், அதாவது ஐந்து வகையான 'ம' காரங்கள் என்று அழைப்பர். இந்த ஐந்துவிதமான மகரங்களை உண்பதன் மூலமாகவும், இதனை தீவிரமாக கடைப்பிடிப்பதன் வாயிலாகவும், முழுநிலை [முக்தி] அடையலாம் என்று நம்புவதுதான் 'காபாலிகம்' எனும் புராதன வழிபாட்டு முறை. காபாலிகர்கள் என்று பண்டைய சமூகத்தில் அறியப்பட்டிருந்த இவர்கள் கபால ஓட்டில்தான், அதாவது மண்டையோட்டில் தான் பிச்சை எடுத்து உண்பார்கள். அதனாலே இவர்கள் காபாலிகர்கள் என அழைக்கப்பட்டனர். இவர்கள் சுடுகாட்டிலும் ஊரின் ஒதுக்குப்புறங்களிலும்தான் வசிப்பார்கள்.



இப்படிப்பட்ட சத்ய சோமன் எனும் காபாலிகனும், அவனது இணையாள் தேவசோமையும்தான் இந்நாடகத்தின் மைய மாந்தர்கள்.

**மதுரமிக்க மது குடித்து முக்தி தேடுவம்**

**கள் குடித்து கறி புசித்து முக்தி நாடுவம்**

**காதல் செய்து கூடல் செய்து சிவனைத்தேடுவம் - தேடி**

**முக்தி வழி காட்டும் சிவனை ஆடிப்பாடுவம்**

என காபாலிகனும் அவன் தோழியும் கள் குடித்தபடி ஆடிப்பாடி வருவதோடு நாடகம் தொடங்குகிறது. கள்வெறி தலைக்கேறியதால் , முக்தி வழி குறித்த உரையாடலின் போது எதிலும் காரண காரியங்களைத் தேடுகிற சமணர்களை, நாத்திகர்கள் என, இஷ்டத்துக்கும் வாய்க்கு வந்தபடி ஏசுகிறான் காபாலிகன் .

இப்படி சமணர்கள் பற்றி பேசியதால் எனது வாய் அசுத்தமாகிவிட்டது. எனவே, "கள்ளைக் குடித்து என் வாயைக் கழுவவேண்டும் வா, கள்ளுக்கடைக்குப்போவோம்" என தன் தோழி தேவ சோமையினை அழைத்துக்கொண்டு மறுபடியும் கள்ளுக்கடைக்குச் செல்கிறான்.

கள்ளுக்கடைக்குச் சென்று கள் குடித்து வரும்போது காபாலிகனது பிச்சைப்பாத்திரம் காணாமல் போய்விடுகிறது. அவர்கள் தவித்துப் போய் மீண்டும் சென்ற இடங்களில் எல்லாம் தேடிச் செல்கிறார்கள். எங்கும் கிடைக்காமல் போக, அப்பக்கம் வரும் நாகசேனன் எனும் புத்த துறவியை பிடித்து, "நீதான் திருடிக்கொண்டாய்" என வம்பிழுத்துக் கொண்டிருக்கையில், பப்ருகல்பன் எனும் பாசுபதன் அங்கு வருகிறான். அவன் மத்தியஸ்தம் செய்துவைக்க முயல்கிறான். அம் முயற்சியும் தோல்வியில் முடிய, இறுதியாக நீதிமன்றம் செல்ல முடிவெடுத்து அனைவரும் நீதிமன்றம் செல்கிறார்கள்.

அங்கு மனநலம் குன்றியவன் துரத்தி வந்த நாயின் வாயில், இவனின் பிச்சைப்பாத்திரம் இருப்பதை அறிகிறான். அவர்களிடம் மல்லுக்கட்டி, தன் பிச்சைபாத்திரத்தை ஒருவழியாக திரும்பப்பெற்ற காபாலிகன், தேவசோமையை புறப்பட அழைக்கிறான். பிச்சைபாத்திரத்தை தேடுகையில் நடந்த உரையாடலின் போது நிகழ்ந்த மனக்கசப்பால் தேவசோமை அவனுடன் செல்ல மறுக்கிறாள். பின் அவனை விட்டுப் பிரிந்து புத்த மதத்தை தழுவுகிறாள் என்பதோடு கதை முடிவடைகிறது.

மகேந்திரவர்மனது மூலப்பிரதி, புத்த மற்றும் சமண சமயங்களை கடுமையாகப் பகடி செய்கிறது . ஆனால், இந்நாடகத்தினது மையப்பாத்திரங்களில் ஒன்றான தேவசோமா இறுதியில் 'புத்த மதத்தை'







தழுவுவதாக மீள்வாசிப்பு செய்திருக்கிறார் நாடகாசிரியர் பிரளயன்.

மிகுந்த நகைச்சுவையோடு நிகழும் இந்நாடகத்தில், "அந்த காலத்து ராஜாக்களுக்கு உட்கார்ந்து நாடகம் எழுதவெல்லாம் நேரமிருந்திருக்கிறது. இப்போது ஆளும் ராஜாவுக்கோ நாடு நாடாக சுற்றவே நேரம் போதவில்லை" என அங்கலாய்ப்புடன் தொடங்கி, நாடகம் முழுமையும் இந்துத்துவாவின் விஷமத்தனங்களை பகடியாக்கியுள்ளனர்.

பார்வையாளர்களின் அகத்தினுள் இருக்கும் குமைச்சல்களை புறத்தில் நிகழும் நாடகக் காட்சியோடு இயைந்து, வாய்விட்டுச் சிரித்தும் கைதட்டி ஆரவாரித்தும், பார்வையாளர்கள் தங்களை சாந்தப்படுத்திக் கொண்டார்கள் என்பதை உணர முடிந்தது.

சிவனைக் கும்பிடுகிறவர்கள் 'சைவம்', விஷ்ணுவைக் கும்பிடுகிறவர்கள் 'வைஷ்ணவம்' என்றால், கருப்பண்ணசாமியைக் கும்பிடுகிறவர்கள் 'கருப்பண்ணம்', வீரண்ணசாமியைக் கும்பிடுகிறவர்கள் 'வீரண்ணம்' தானே என்றவாறே, ஒவ்வொருவரும் தாங்கள் கும்பிடும் தெய்வத்தின் பெயரால் ஒவ்வொரு சமயப் பெயரைச் சொல்லும் கள்ளுக்கடைக் காட்சி, சமயங்கள் குறித்த நமது பார்வைகளை புரட்டிப்போடும் உச்சக்கட்ட பகடி.

அறத்தின் சின்னமாக இருக்கவேண்டிய நீதிமன்றம் அதிகாரத்தின் சின்னமாக உருமாற்றப்பட்டது நம் காலத்தின் துயரம். நாடகத்தின் நீதிமன்றக் காட்சியில் மனநலம் குன்றியவனும் நாயும், நீதிபதிகளை கதறடிக்கச் செய்து, அட்டகாசம் செய்த காட்சி பார்க்க, அவ்வளவு ஆறுதலாக இருந்தது.உச்சபட்சமாக நாய் நீதிமன்றத்தில் காலை தூக்கி 'உச்சா' அடிப்பது கூடுதல் சிறப்பு.

பாரம்பரிய நாடகங்களைப் போல் பாடியும் ஆடியும் நடித்த நடிகர்களின் திறன் மிக்க பங்களிப்பு, கண்ணுக்கு விருந்தான ஒளியமைப்பு, தொய்வில்லாத நகர்வு என மிகுநேர்த்தியோடு இருந்ததால் பார்வையாளர்களை வெகுவாக கவர்ந்திழுத்தது நாடகம். ●

ந. பெரியசாமி <Naa Periyasamy>

# ஸ்பெயின்

டிசே தமிழன்



ஐரோப்பாவில் மூன்று நாடுகளுக்குக் கட்டாயம் போகவேண்டும் என்ற ஒரு கனவு எனக்குள் எப்போதும் இருந்து கொண்டிருந்தது. பிரான்ஸும் இத்தாலியும் ஸ்பெயினும் என்னை எப்போதும், அவற்றின் கலை இலக்கியங்களினூடு ஈர்த்துக் கொண்டிருக்கின்ற நாடுகள். கூடுதலாக போர்த்துக்கல்லையும் சேர்க்கலாம். சென்ற வருடம் இத்தாலியையும் அதற்கு முதல்வருடம் பிரான்ஸையும் பார்த்திருந்தேன். இந்த வருடம் ஸ்பெயினுக்கானது.



La Sagarida Familla (Spain)

ஸ்பெயினை அடையாளப்படுத்தும் முக்கியமான ஒரு கட்டடக்கலையாக La Sagarida Familla இருக்கின்றது. இதன் முக்கியத்துவம் என்னவென்றால் 1880களில் கட்டத் தொடங்கிய இந்தத் தேவாலயமானது இன்னமும் நிறைவு செய்யப்படாது இப்போதும் கட்டப்பட்டுக் கொண்டிருக்கின்றது என்பதாகும். உலகில் கட்டிமுடிக்கப்படாத ஒரு தேவாலயம் இந்தளவிற்கு புகழ்பெற்றதாக இருக்கின்றதா என்பது அரிதாகத்தான் இருக்கும்.



இது அந்தோனியோ கெளடியின் (Anthony Gaudi) மிகச்சிறந்த வடிவமைப்பில் உருவாகிய ஒரு தேவாலயமானது. மத்தியகால கோதிக் (Gothic) கட்டட




வடிவத்தை உடையது. கோதிக் கட்டட அமைப்பானது வெளியில் பார்க்கும்போது icicles போன்ற வடிவத்துடன் வானை நோக்கும் கூரானவையாகவும், உள்ளே போய்ப் பார்க்கும்போது மாடவிதானங்கள் மிகுந்த உயரத்திலும் இருக்கும். இதன் அடிப்படையே இப்படி வானை நோக்கி மானிடர் நீண்டு சென்று கடவுளை அடைந்துவிடுவது என்பதாகும். அத்துடன் உள்ளே நாம் நின்று பார்க்கும்போது நம்மை அதன் வடிவமைப்பின் பிரமாண்டத்தில் மிகச்சிறியவர்களாக (கடவுளின் முன்) உணரச் செய்வதுமாகும்.

இதில் வானை நோக்கி நீளும் பத்து கூம்புகள் (இன்னும் சில கட்டி முடிக்கப்படவில்லை). ஒவ்வொன்றும் கடவுள் அருளிய பத்துக் கட்டளைகளை (10 Commandments) அடையாளப்படுத்துபவை. ஒவ்வொன்றிலும் அவை குறித்தான கதைகள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

ஒரு நூற்றாண்டுக்கு மேலாக நீளும் இந்தக் கட்டட நிர்மாணம், அந்தோனி கௌடி இறந்த நூற்றாண்டான 2026இல் நிறைவு செய்யப்படுமென கூறப்படுகின்றது.

## Flamingo Dance

ஃப்ளமிங்கோ நடனம் இன்று ஸ்பெயினின் அடையாளங்களில் ஒன்றாக மாறியிருக்கின்றது. பாடல், ஆடல், கிற்றார் மற்றும் கைதட்டல் வழி இசையை மீட்டல் எனப் பல்வேறு கூறுகளை இந்த நடனம் தன்னகத்தே கொண்டிருக்கின்றது. இன்று ஃப்ளமிங்கோ உலகின் பல்வேறு பகுதிகளில் பிரபல்யமாக இருந்தாலும், இது ஜிப்ஸிகளின் ஊடாக வந்துசேர்ந்த ஒரு நடனமாகும். ஸ்பெயினுக்குள்ளும், இந்தியா, ஈரான், எகிப்தினூடாக சில நூற்றாண்டுகளுக்கு முன் வந்துசேர்ந்த நாடோடிகளால் அந்தலூசியாப் பகுதிகளில் இது கொண்டுவந்து சேர்க்கப்பட்டிருக்கின்றது. தொடக்கத்தில் தெருக்களில் நாடோடிகளால் ஆடப்பட்ட ஆட்டம், பிறகு கொஞ்சம் கொஞ்சமாக ஸ்பெயினின் கஃபேகளுக்குள்ளும், உள்ளக அரங்குகளுக்குள்ளும் நுழைந்திருக்கின்றது.

ஸ்பெயினில் ஃப்ளமிங்கோ வந்து வளர்ந்த காலத்தை மூன்று பகுதிகளாகப் பிரிக்கின்றனர். முதலில் நாடோடிகளால் கொண்டுவரப்பட்டு, பின்னர் ரொமாண்டிசக் காலத்தில் வளர்க்கப்பட்டு, பிராங்கோவின் ஆட்சியில் ஸ்பெயினின் அடையாளங்களில் ஒன்றாக மாற்றப்பட்டதென்று கூறுகின்றார்கள். ஃபிராங்கோ தன் சர்வாதிகார ஆட்சியின்போது, ஸ்பெயினுக்குள் உல்லாசப் பயணிகளை வரவழைப்பதற்காகவும், தனது கொள்கைப் பிரச்சாரங்களைச் செய்யவும் ஃப்ளமிங்கோவைப் பாவித்திருக்கின்றார். ஃபிராங்கோவின் சர்வாதிகார ஆட்சி முடிகின்றபோது, ஃப்ளமிங்கோ தனக்கான ஓர் உயரிய இடத்தை ஸ்பெயினில் அடைந்துவிட்டிருக்கின்றது.

ஃப்ளமிங்கோ நடனத்தைப் பற்றி ஏற்கனவே அறிந்திருந்தாலும், இதற்கெனத் தனித்துவமாக ஆடப்படும் அரங்கிற்குச் சென்று பார்த்தது இதுதான் முதற்தடவை. மிகச்சிறிய அரங்கு. முதல்வரிசையில் போய் அமர்ந்திருந்தேன். மெல்லிய இருளில், Melancholyயான இசையில் ஃப்ளமிங்கோ இப்படி ஒரு உருக்கமானதும், Eroticம் ஆன ஒரு நடனமாகவும் இருக்குமென எதிர்பார்த்திருக்கவே இல்லை. வேறு பலவேறு வகையான நடனங்களைப் பார்த்திருந்தாலும், அவற்றில் Erotic ஆட்டமுறையால் மட்டுமில்லை, ஆடை முறைகளாலும் கொண்டுவந்திருப்பர். இதில் அப்படி எந்தவகையான 'கவர்ச்சிகரமான' ஆடை உடுத்தல்களும் இல்லாது, ஆட்ட முறையால் கொண்டுவந்தது வியப்பாக இருந்தது. இசை வாத்தியங்களைக்கூட அப்படிப் பெரிதாகப் பாவிக்கவில்லை. ஆனால், பாடலும் நடனமும் எங்கள் நரம்புகளுக்குள் ஊடுருவியபடி இருந்தது.

நான் ஃப்ளமிங்கோ நடனத்தைப் பார்த்தது பார்சிலோனாவின் பிரபல்யம் வாய்ந்த Los Tarantos என்கின்ற ஆடல் அரங்கில். இதே பெயரிலேயே பிரபல்யமான ஒரு திரைப்படம் ஃப்ளாமிங்கோ நடனத்தை அடிப்படையாகக் கொண்டு 1960களில் எடுக்கப்பட்டிருக்கின்றது. இந்த ஆட்டங்களைப் பார்த்த நீட்சியில் ஒரு சிறு ஆவணப்படத்தைப் பிறகு பார்த்தேன். அதில் ஃப்ளமிங்கோவின் இந்திய அடிவேர் தேடிவரும் ஒருவர் தமிழ்நாட்டில் இருக்கும் ஒப்பாரிப் பாடல்களில் அதன் சில கூறுகள் இருக்கின்றதென்று கூறுகின்றார். அதில் சின்னப்பொண்ணு தமிழ் ஒப்பாரிப் பாடலொன்றை உருக்கமாகப் பாடுகின்றார்.

ஸ்பெயினில் ஃப்ளமிங்கோவையும் கேரளாவில் கதகளியையும் இன்னபிற இடங்களில் வேறுவகை நடனங்களையும் பார்க்கும்போதெல்லாம், நாமுந்தான் எத்தகைய அற்புத கலைகளையும், அருமையான கலைஞர்களையும் கொண்டிருக்கின்றோம், ஆனால் அதை மதிக்கவோ, உலகின் பிற கலைகளுக்கு நிகராக நின்று நாம் சளைத்தவர்களில்லை என்று செப்பி எடுத்துச் செல்லவுந்தான், நம் சமூகத்தில் எந்தக் குரல்களும் உரிய அரசுகளும் இல்லையென்ற சலிப்புதான் மேலிடுகின்றது.

## Plaza de Sant Felip

இந்தப் பிளாஸாவையும் இதனோடிருக்கும் தேவாலயத்தையும் பல்வேறு திரைப்படங்களில் நாங்கள் பார்த்திருப்போம். முக்கியமாக எனக்குப் பிடித்த 'Vicky Christina Barcelona' மற்றும் 'Perfume'ல் எளிதில் அவதானித்திருக்க முடியும். Vicky Christina Barcelonaவில், அந்தோனியோ விக்கியோடும், கிறிஸ்டீனாவோடும் சேர்ந்து உணவருந்தும்போது, விக்கியின் கால்களைத் தடவி தவறான சமிக்ஞையைக் கொடுக்கும் காட்சி உங்களுக்கு நினைவில் வரக்கூடும். அது இந்த இடத்திலேயே படமாக்கப்பட்டிருக்கின்றது.

பின்னாட்களில் திரைப்படங்களினால் பிரபல்யம் வாய்ந்ததாக இந்த இடம் ஆகிவிட்டாலும் இதற்குள் ஒரு சோகமான வரலாறு இருக்கின்றது. ஸ்பெயினில் சர்வாதிகாரி பிரான்ஸிக்கோ



ஃபிராங்கோவிற்கு எதிராக உள்நாட்டு யுத்தம் (1936-1939) நடைபெறுகின்றது. பார்சிலோனா உறுதியாக பிராங்கோவிற்கு எதிராகப் போராடியபோது, முற்றுகையை உடைக்க பிராங்கோ விமானத் தாக்குதல் நடத்துகின்றார். இந்தப் பிளாஸாவில் இரண்டு குண்டுகள் விழுகின்றன. முதல் குண்டில் இந்தத் தேவாலயத்தில் அடைக்கலம் புகுந்த மக்களில் 30 பேரும், பிறகு 12 பேரும் கொல்லப்படுகின்றனர். இதில் 20 பேரளவில் சிறுவர்களாக இருந்தனர் என்பது பெருஞ்சோகம். இத்தாக்குதல் நிகழ்ந்த சேதத்தை இப்போதும் மறக்கவிடாது நினைவூட்டியபடி பாதிக்கப்பட்ட சுவர் பாதுகாக்கப்படுகின்றது.

பார்சிலோனா பல்வேறு விடயங்களுக்கு பிரபல்யம் வாய்ந்தெனினும், இன்றும் அதன் பெரும்பகுதியாக அரசவிழ்ப்பாளர்கள் (Anarchists) இருக்கின்றார்கள் என்றும், அதற்கென தனியே ஒரு Walking Tour இருக்கின்றதென எங்களுக்கு இந்த இடத்தின் விபரங்களைச் சொல்லிக் கொண்டிருந்த சுற்றுலா வழிகாட்டி கூறியிருந்தார்.

இந்தச் சேதமடைந்த சுவருக்கு இன்னொரு கதையும் சொல்லப்படுகின்றது. ஃபிராங்கோவிற்கு எதிராகப் போராடிய அரசவிழ்ப்பாளர்கள், பலரை இதேயிடத்தில் சுட்டுக்கொன்ற பிராங்கோ அரசு, அதை மூடிமறைக்கவே விமானக் குண்டுத் தாக்குதலை நடத்தியது என்றும் சொல்கின்றார்கள். எதுவாயிருந்தாலும், இலங்கையைப் போலவே தனது சொந்த மக்கள் மீது குண்டுத் தாக்குதலை நிகழ்த்திய ஒரு கொடுங்கோல் அரசுதான் ஃபிராங்கோவினுடையது என்பதும், பிறநாடுகள் பல 2ஆம் உலக மகாயுத்தத்தோடு ஜனநாயக ஆட்சியிற்கு வந்தபோதும், ஸ்பெயின் ஃபிராங்கோ மரணமாகிய 1975ஆம் ஆண்டுவரை சர்வாதிகார ஆட்சியிற்குள் இருந்தது என்பதும் கவனிக்கத்தக்கது.

## Churros

ஸ்பெயின் போனால் Churros சாப்பிடாமல் வந்தால் 'சாபம்' கிடைக்குமென்று சாப்பாட்டுப் பிரியர்கள் கூறுகின்றார்கள். அதுவும் Churrosஐ, அதனோடு பிரத்தியேகமாய்த் தரும் சொக்கிலேட்டிற்குள் அமிழ்த்தி சாப்பிட்டால் அமிர்தமாக இருக்குமாம்.

இப்படி ஸ்பெயினில் Churrosஐச் சாப்பிட்ட ஆர்வத்தில், இன்னொரு நாட்டில் இருந்த ஆஜெண்டீனா கடையில் Churros வாங்கினால்,







அவர்கள் சீனியை மட்டும் மேலே தூவிவிட்டுத் தந்திருந்தார்கள். எனக்கென்னவோ அது எங்களின் வாய்ப்பனின் ருசி போல இருந்தது. வாய்ப்பனில் இருக்கும் வாழைப்பழம் மட்டும் அதில் 'மிஸ்ஸிங்'காக இருந்தது. ஆக கற்றுக்கொண்ட பாடம் என்னவெனில் ஸ்பெயினிற்குப் போய், ஸ்பெயின் பெண்களின் கைகளிலிருந்து Churros வாங்கிச் சுவைத்தால் மட்டுமே அது Churros ஆகும்.

## La Rambla

"The happiest street in the world, the street where the four seasons of the year live together at the same time, the only street on Earth that I wish would never end, rich in sounds, abundant of breezes, beautiful of meetings, ancient of blood: Rambla de Barcelona." - Federico García Lorca

La Rambla என்பது மரங்களும் பூக்கடைகளும் தெரு ஓவியங்களும், இன்னபிறவும் சூழ்ந்த மிக அழகான கிட்டத்தட்ட ஒன்றரை கிலோமீற்றர்கள் நீளும் ஒரு தெருவாகும். ஒரு முனையில் Plaça de Catalunyaவிலிருந்து தொடங்கி இன்னொருமுறையில் மிக உயரத்தில் வீற்றிருக்கும் கிறிஸ்தோபர் கொலம்பஸின் சிலையோடு முடிகின்றது. கொலம்பஸின் சிலையோடு பார்சிலோனாவின் கடல் தொடங்குகின்றது. கைகளால் காற்றின் திசையில் சுட்டிக்காட்டும் கொலம்பஸ் குறிப்பது அவர் 'கண்டுபிடித்த' அமெரிக்கா என்று பலர் சொன்னாலும், இந்தச் சிலை உண்மையான திசையின்படி சுட்டுவது அதற்கு எதிர்த்திசையிலான எகிப்தை என்று எங்களின் வழிகாட்டி நகைச்சுவையாகச் சொன்னார். Plaça de Catalunya என்பது ஒருவகையில் பார்சிலோனாவின் மத்தி. ஒரு திசையில் இதன் பழமைவாய்ந்த நகரான Gothic City இருக்கின்றதென்றால் அதன் மறுதிசையில் பத்தொன்பதாம் நூற்றாண்டுக்குப் பிறகு எழுப்பப்பட்ட நவீன கட்டடங்கள் விகசித்து நிற்கின்றன.



இருபக்கமும் மரங்கள் சூழ்ந்த La Ramblaவினூடு நடந்துபோனால், மர்லின் மன்றோ மாடியில் காட்சியளிக்கும் Erotic Muesumஐத்தையும், மிகப் பிரசித்தம் பெற்ற உணவுச்சந்தையான La Boqueríaவையும் நீங்கள் எளிதில் அடையமுடியும். மனதை இதமாக்கிவிடும் இந்தத் தெருவில்தான் சென்ற வருடம் ஆவணியில் ஒருவர் வேகமாய் வாகனத்தை ஓட்டி 15 பேருக்கு மேலான மக்களைப் பலியெடுத்தும், இன்னும் பலரைக் காயங்களுக்கும் உட்படுத்தியதுமானதுமான துரதிஷ்டவசமான சம்பவமும் நிகழ்ந்திருந்தது.

## Hospital de Sant Pau

நீண்டகாலத்திற்கு வைத்தியசாலையாக இயங்கிய இந்த இடம், அண்மையில் கலாசார மையமாகவும் நூதனசாலையாகவும் மாற்றப்பட்டிருக்கின்றது. யுனெஸ்கோவின் World Heritage Siteகளில் ஒன்றாகவும் இது இருக்கின்றது. அந்தோனியோ கெளடியின் பிரபல்யம் வாய்ந்த Sagarida Famillaவிற்கு அருகில் - 10 நிமிட நடையில் - அமைந்திருக்கின்றது. இன்னமும் கட்டிமுடிக்கப்படாது வளர்ந்துகொண்டேயிருக்கும் பிரமாண்டமான Sagarida Familla தேவாலயத்தைவிட, Sant Pau என்னை இதன் எளிய / திருத்தமான வடிவமைப்பால் அதிகம் கவர்ந்திருந்தது.

### Catalonia: தனிநாடு சாத்தியமா?

ஸ்பெயினுள்ள கட்டலோனியா ஒரு நீண்டகால வரலாற்றை உடைய நிலப்பரப்பாகும். ஃபிராங்கோவின் காலத்தில் தனது சுயநிர்ணய உரிமைக்காகக் கடுமையாகப் போராடித் தோற்றுமிருக்கின்றது. எனினும், ஃபிராங்கோவின் சர்வாதிகார ஆட்சியின் பின், தனக்கான பல உரிமைகளை மீளப்பெற்றதோடல்லாது, 2006இல் கட்டலோனியா ஒரு 'தேசமாக'வாவும் (Nation) பிரகடனப்படுத்த ஸ்பெனிய அரசால் அனுமதியும் வழங்கப்பட்டிருந்தது. எனினும், 2010இல் 'தேசமாக' இருக்கும் உரிமை உட்பட பல பறிக்கப்பட்டுமிருந்தது. இதன் நீட்சியோடும், ஸ்பெயினில் ஏற்பட்ட பொருளாதார வீழ்ச்சியினாலும், கட்டலோனியாவின் தன்னொரு தேசமாகப் பிரகடனப்படுத்தும் குரல் அண்மையில் வெளிக்கிளம்பத் தொடங்கியது. கட்டலோனியா பிரதேசத்தினூட நிறையப் பொருளாதாரத்தை (கிட்டத்தட்ட மொத்த ஸ்பெயினில் 20%) பெறுகின்ற மத்திய அரசு, கட்டலோனியா மக்களுக்கு அதை உரியமுறையில் திரும்பித் தராது, அதிக வரிகளை மக்களுக்கு விதித்தமையும் கட்டலோனியா தனிநாட்டுக் கோசத்திற்கு முக்கிய காரணங்களில் ஒன்றாக அமைந்தது.

இதன் நீட்சியில் ‘கட்டலோனியா எமக்கே’ என்ற குரல் வலுத்து, தம்மையொரு தேசமாக்க வேண்டுமென்று ஒன்றிணைந்த கட்சிகள் தேர்தலில் வெற்றி பெற்றுமிருந்தன. அதன் தொடர்ச்சியில், சென்ற அக்டோபரில் தனிநாட்டுக்கு கட்டலோனியாவின் மக்கள் (90%) ஆதரவளித்திருந்தனர். எனினும், நாம் கவனிக்க வேண்டிய விடயம் என்ன என்றால் இப்படி பெரும்பான்மையாக (90%) தனிநாட்டுக்கு வாக்களித்திருந்தாலும், இங்கே வாக்களித்தவர்கள் மொத்த கட்டலோனியா பிரதேசத்தின் 40% வீதம் மட்டுமே ஆகும். ஆக தனிநாடு வேண்டுமா அல்லது வேண்டாமா என்று வாக்களிக்காதவர்கள் கிட்டத்தட்ட 60% ஆனோர் என்பதாகும்.

மேலும், 2017 ஒக்ரோபர் 27இல் கட்டலோனியா தனிநாடாகப் பிரகடனப்படுத்த, மத்தியில் இருந்த வலதுசாரி அரசு அதைக் கொடுமையாக அடக்குகின்றது. இந்தத் தேர்தல் செல்லுபடியாகாது என்று சட்டத்தினூடாக கட்டலோனிய அரசைக் கலைக்கின்றது. இதற்காய்ப் போராடிய பல்வேறு கட்சித் தலைவர்களைக் கைதுசெய்ய, சிலர் தப்பி பிற ஐரோப்பிய நாடுகளுக்குள் அடைக்கலம் தேடுகின்றனர்.

நான் பார்சிலோனாவிற்குப் போனபோது ஒருபக்கத்தில் நாளாந்த வாழ்க்கையும், மறுபுறத்தில் கட்டலோனியா தனிநாட்டுக் கோரிக்கையினால் சிறை வைக்கப்பட்டிருந்தவர்களை விடுதலை செய்ய நடந்த கூட்டங்களையும் பார்த்திருந்தேன். கட்டலோனிய தனிநாட்டுக் கோரிக்கை வந்தபோது, அவர்கள் ஏற்கனவே கட்டலோனியாவிற்கு இருக்கும் கொடியின் ஒருபகுதியை நீல வர்ண முக்கோணத்தையும் சேர்த்திருந்தனர். இது கியூபாவின் கொடியின் வடிவத்திற்கு அண்மையாகவும், ஒருவகையில் தனிநாட்டுக் கோரிக்கை அதைக் குறிப்பதாகவும் சொன்னார்கள்.

அடுத்தடுத்த வீடுகளில் தனிநாட்டுக் கோரிக்கைக்கும், அதேவேளை ஸ்பெயினோடு சேர்ந்திருக்க ஆதரவளிக்கும் கொடிகளையும் பார்த்தேன். எதை ஆதரிக்கின்றார்களோ அதை வெளிப்படையாக உணர்த்தும் ஒரு சுதந்திர நிலைமை இன்னமும் கட்டலோனியாவில் இருப்பதை அவதானிக்க முடிந்தது. இலங்கை போன்ற நாடுகளில் 'தேசம்', 'சுயநிர்ணய உரிமை' என்பவற்றை இப்படிப் பொதுப்படையாக முன்வைத்துவிட்டு வீடுகளில் நிம்மதியாக வாழமுடியுமா என்ற யோசனைதான் அப்போதுதான் வந்தது.

கட்டலோனியா தன்னை தனிநாடாகப் பிரகடனப்படுத்தினாலும் உலகில் எந்த நாடுமே அதை அங்கீகரிக்கும் சமிக்ஞைகள் எதுவும் அண்மையில்லை. படுகொலைகள் நடந்த கொஸாவைக்கூட இன்னும் பல நாடுகள் தனித்த நாடாக அங்கீகரிக்கத் தயாரில்லை என்பது அண்மைக்கால உதாரணம்.

எனினும், கட்டலோனியா நிச்சயம் இந்தப் போராட்டங்களினூடாக மிக வெளிப்படையாக தன்னையொரு 'தேசமாக' காட்டப்போகின்றது. அதை நோக்கி எப்படி அவர்கள் நகர்கின்றார்கள் என்பதே நாம் கற்றுக்கொள்ள வேண்டியது. அதுமட்டுமில்லாது ஸ்பெயினின் மற்றப் பிரதேசமான பாஸ்கில் தனிநாடு கோரிப் போராடிய இயக்கம், தனது தனிநாட்டுக் கோரிக்கையைக் கைவிடுகின்றோம் என்று கடந்த மாதத்தில் அறிவித்த பின்னும், சில நாட்களுக்கு முன் பல்லாயிரக்கணக்கான மக்கள் 200 கிலோமீட்டர் நீளத்திற்குக் கரங்களை கோர்த்து, தமது தனித்'தேச' விருப்பை குறித்த ஒரு ஆர்ப்பாட்டத்தை நடத்தியிருக்கின்றார்கள் என்பதையும் நாம் அவதானிக்க வேண்டும்.

## Paella

Paella என்பது ஸ்பெயினில் பிரசித்தமான உணவாகும். உண்மையில் இது ஸ்பெயினில் ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தின் உணவாக, உள்ளூர்



ஸ்பானியர்களாகக் கொள்ளப்பட்டாலும், நம்மைப் போன்ற பயணிகள் இதை ஸ்பெயினின் தேசிய உணவாகக் கொண்டாடிக் கொண்டிருக்கின்றனர்.

Paella என்று பெயரிருந்தாலும் பை(ய்)யா என்றே உச்சரிக்கப்பட்டிருக்கின்றது. இந்த உணவின் அநேகமான எல்லா வகையையும் சுவைத்திருந்தேன். தனியே மரக்கறிகளால் மட்டும் ஆனது, தனியே கடல் வகையால் மட்டும் ஆனது, கடல் உணவும் கோழியும் கலந்தது என பல்வேறு வகையில் பைய்யா தயாரிக்கப்படுகின்றது. சோற்றுடன் கலந்து பரிமாறப்படும் எதுவுமே எனக்குச் சொர்க்கம் போன்றதென்பதால் நானும் ருசித்து ருசித்து பைய்யாவைச் சாப்பிட்டேன்.

என்றேனும் ஒருகாலம் நானுமொரு சிறு உணவகம் அமைத்து, சாப்பிடுபவர்களும் என்னை நம்பி வந்தால், நானும் இப்படி இலங்கையில் வைத்து பைய்யாவைச் சுடச்சுடப் பரிமாறுவேன் எனக் கூடவே சாப்பிட்டுக் கொண்டிருந்த நண்பருக்குச் சொன்னேன்.

“ஓ.. நீ வழமையாக அவிக்கும் சோற்றுக்குள் மரக்கறிகளையும், கொஞ்சம் மைசூர்ப் பருப்பையும் போட்டு வேகவைத்து இதுதான் எங்கள் அம்பனை இராசதானியின் தேசிய உணவென்று பரிமாறுவாயே, அதுதானா உனது Jaffna Style Paellaவா” என்று கேட்டார் நண்பர்.

நல்லதொரு எழுத்தாளன் ஆவதுதான் கனவாகிப்போய்விட்டதென்றால், சிறந்ததொரு சமையற்காரன் ஆகவும் இந்தச் சமூகம் விடாதென்று நான் எனக்குள் நினைத்துக்கொண்டேன். ●

"டிசே தமிழன்" <elanko@rogers.com>

தொடர்-11

# யாதும் சுவடுபடாமல்...

கால சுப்ரமணியம்

இத்தொடரில் காலத்தாலும் வரலாற்றாலும் ஆதிக்க மேனிலை நோக்காலும் இலக்கிய ரசனை மாற்றங்களாலும் தற்செயல் விளைவுகளாலும் வேண்டுமென்றேயும்கூட, மறைக்கப்பட்டு மறக்கப்பட்டு மீண்டும் கண்டடைந்து தமது தனிச்சிறப்புகளை நிலைநிறுத்திக்கொண்ட சில இலக்கியப் பிரதிகளைப் பற்றி அறிமுக நிலையில் சொல்லப்படுகிறது. நீண்ட பழமையிலிருந்தும் இன்றைய நவீனகால நடப்பின் குறுகிய எல்லைக்குள்ளும் இப்படியான பல பிரதிகள் இருக்கவே செய்கின்றன. முன் இதழ்களில் 'கில்காமிஷ்', 'ஸ்வப்ன வாஸவத்தம்', 'சீதக்காதி நொண்டிநாடகம்', 'தக்கை ராமாயணம்', 'மத்தவிலாசம்', 'தம்பிரான் வணக்கம்', 'கதா சரித் சாகரம் என்னும் பெருங்கதை', 'ஃபிராய்டு பற்றிய மேசனின் விமர்சனம்', சி.சு. செல்லப்பாவின் மதுரை வட்டார சிறப்புக் கதைகள், சி. மணியின் எழுத்தும் நடையும் பற்றிப் பார்த்தோம். இந்த இதழில்...

## பிரமிள் கதைகள்

1

*தமிழ்ச்சிறுகதை வரலாற்றில், பிரமிள் எழுதிய கதைகள் தவிர்க்கமுடியாத தனியிடம் வகிப்பவை. ஆனால், இது பற்றிய புரிதலும் அங்கீகாரமும் வழக்கம்போலவே இன்றைய நவீன தமிழ் இலக்கிய உலகில் இல்லை. எனவே, பிரமிளின் கதைகளைத் தொகுத்துத் தந்தவன் என்ற முறையில், இன்று பிரமிளின் ஒட்டுமொத்தத் தொகுப்புகளின் வெளியீடு (2018 ஜூன்) நிகழ்ந்துள்ள நிலையில், அதில் இரண்டாவது தொகுதியாக பிரமிளின் கதைப் பனுவல்கள் முழுமையாகத் தொகுக்கப்பட்டு முன்வைக்கப்பட்டுள்ள வேளையில், பிரமிளின் கதைகள் பற்றிய அறிமுகத்தை இத்தொடரில் செய்வது அவசியமான காரியம் என்று நினைக்கிறேன்.*

*புதுமைப்பித்தனுக்குப் பிறகு அவரைப் போன்ற ஒரு படைப்பாளுமை பிரமிள் (1939-97). சமூக விமர்சனமும் அங்கதக் கூர்மையும் கொண்ட கதைகளை, ருசிகரமும் ஆனந்தமும் கொண்ட கதைகளை எழுதியவர். கூடுதலாக இவரிடம் ஆன்மீக ஆழமும் இணைந்துவிடுகிறது. கவிதையிலும் விமர்சனத்திலும் தமிழின் முதன்மைத் திறனாளியாக மதிக்கப்படுகிறவர் பிரமிள். அவருடைய கதைப் பிரபஞ்சம், அவருடைய வாழ்நாளில் முழுமையாகப் புத்தக ரூபத்தில் வாசகர்களுக்குக் கிடைக்காதது பெருங்குறையே. அப்படி வெளிவந்திருந்தால் சிறுகதையில் பிரமிளின் சாதனை முன்பே நிறுவப்பட்டிருக்கும்.*



*பிரமிள் வாழ்நாளில், 'ஆயி' (1985) என்னும் குறுநாவல் தனிநூலும், இரு குறுநாவல்களும் இரு சிறுகதைகளும் மட்டும் கொண்ட 'லங்காபுரி ராஜா' (1988) என்னும் தொகுப்பு நூலும், 'லயம்' வெளியீடாக என்னால் வெளியிடப்பட்டது.*

*சிறந்த தமிழ்ச் சிறுகதைகளைத் தேர்ந்து தொகுத்தவர்களும் பிற மொழிகளில் மொழிபெயர்த்தவர்களும் தனிப்பட்ட விருப்புவெறுப்பினால் பிரமிளின் கதைகளைப் புறக்கணித்தே வந்துள்ளார்கள். சில தொகுப்புகளில் மட்டுமே பிரமிளின் கதைகள் சேர்க்கப்பட்டன.கண்ணன் எம். தேர்வில், பிரஞ்சில் வெளிவந்துள்ள தமிழ்ச்சிறுகதைத் தொகுப்பில் 'லங்காபுரி ராஜா' கதை சேர்க்கப்பட்டுள்ளது கவனத்திற்குரியது.*

2

*சென்ற 2007-ஆம் ஆண்டு, பிரமிளின் அனைத்துப் புனைகதைகளையும் தொகுத்து, 'பிரமிள் படைப்புகள்' என்ற நூலாக வெளியிட்டிருந்தேன். அதை'அடையாளம் பதிப்பகம்' வெளியிட்டிருந்தது. அவற்றில் அவரது ஆரம்ப காலக் கதைகளுக்கு மாதிரிகளாக 'தீப்பந்தம்', 'கதவைத் தொட்ட நிழல்'என்ற கதைகளை மட்டும் - இவை இரண்டும் அவரது இருவிதப் போக்குகளுக்கு ஆரம்பம் என்பதால் சேர்த்திருந்தேன்; 'யாழ்' என்ற மாணவர் கையெழுத்து இதழில் வெளிவந்தவை.*

*ராமகிருஷ்ணா மிஷன் நடத்திய பள்ளியில் படித்தபோது, பிரமிளுக்கு சீனியர் அமரசிங்கம்; பள்ளியில் ஸ்கூல்பைனல் படித்துக்கொண்டிருந்த போதும் பிறகு ஈ.கி.ச.ஸ்ரீகோணேஸ்வரா இந்துக் கல்லூரியில் படித்த காலத்தும்'யாழ்' என்ற சிறுவர் கையெழுத்து இதழ் ஒன்றை நடத்தி வந்தார் அமரசிங்கம் (புனைபெயர்: வீணைவேந்தன்). அதில் பிரமிளின் ஆரம்பகாலப் படைப்பு முயற்சிகள் வெளிவந்தன.*

*சி.சு.செல்லப்பாவின் 'எழுத்து'(1960 ஜனவரி)இதழில்தான், முதல்முதலில் அச்சில் பிரசுரமானபிரமிளின்'நான்' கவிதை வெளிவந்து, அவர் இலக்கிய எழுத்துலகுக்கு அறிமுகமானார். அதற்குமுன் அவருடைய எழுத்துப் பயிற்சிக்குக் களமாக'யாழ்' இதழ் இருந்திருக்கிறது. கவிதை, கட்டுரை, கதை,*

ஓவியம் என்று நிறைய அப்பத்திரிகையில் எழுதி நிரப்பியிருக்கிறார். பேய்க் கதைகள், மர்மக் கதைகள், சிறுவர்களின் உணர்வுகளைச் சொல்லும் சில தீவிரமான கதைகள் எனப் பலவற்றையும் எழுதிப் பார்த்துள்ளார்.

எண்பதுகளில் அமரசிங்கம், இலங்கை - இந்தியக் கூட்டுத் தயாரிப்பான ஒரு திரைப்படம் தொடர்பான பணிநிமித்தம் சென்னைக்குச் சில தடவைகள் வந்திருந்தபோது, 'யாழ்' பழைய கையெழுத்து இதழ்களில் கைவசம் இருந்தவற்றை, பிரமிளின் தூண்டுதலால், என் பார்வைக்காகக் கொண்டுவந்தார். அவ்விதழ்கள் பற்றிக் குறிப்புகளை எடுத்துக்கொண்டு, 'செவ்வானம்', 'தீப்பந்தம்', 'நாஸ்திகம் என்றால் என்ன?' என்று, கவிதை, கதை, கட்டுரைக்கு ஒவ்வொரு மாதிரிகளை நான் பிரதி செய்து வைத்துக்கொண்டேன்.

நாடகம் எழுதி இயக்கும் முயற்சிகளிலும் பதிப்பகம் நடத்தும் முயற்சியிலும் ஈடுபாடு கொண்டிருந்தவர் அமரசிங்கம். 'ஈழத்து இலக்கியச்சோலை' என்ற பதிப்பகத்தின் மூலம் சில நூல்களை வெளியிட்டார். 'கங்கை காவியம்', 'ப.பொ.சி.கவிதைகள்' (இவர், பிரமிள் மற்றும் அமரசிங்கத்தின் பள்ளித் தமிழாசிரியர். இவர்தான் 'சாமுண்டி' கதையில் வரும் பொய்சொல்லா மெய்யன் என்ற கதாபாத்திரமாக இருக்கலாம்.), அமரசிங்கத்தின் நாடகத்தொகுப்பு ஒன்று என, அவர் வெளியிட்ட நூல்கள் எனது பார்வைக்குக் கிடைத்தன. மேலும், அவர் வெளியிட்ட திருக்கோணமலை சார்ந்த எழுத்தாளர்களின் சிறுகதைத் தொகுப்பு நூல்'ஒற்றைப்பனை'. இதில், பிரமிளின் 'கதவைத் தொட்ட கை' என்ற'யாழ்' கையெழுத்து இதழ் கதை சேர்க்கப்பட்டிருந்தது.

கடுமையான வாழ்க்கைச் சூழ்நிலையில், தமது இலக்கிய நாடக ஆர்வங்களுடன் இயங்கி வந்தவர் அமரசிங்கம். தமது பிரதேசத்தின் மீதும் அதன் கலைவெளிப்பாடுகள் மீதும் உள்ள அவரது பற்றும் பிரமிள் மீதான அபிமானமும் அவரது இவ்வகைச் செயல்களின் மூலம் வெளிப்படுகின்றன.

'படிக்காதே' என்ற தலைப்பில் ஒரே நாளில் பத்துக் கதைகளைப் பிரமிள் எழுதி,'யாழ்'இதழுக்குத் தந்ததாக, 'ஒற்றைப்பனை' நூல் தொகுதி முன்குறிப்பில் கூறியிருக்கிறார் அமரசிங்கம். ஆனால், நாளொன்றுக்கு ஒரு கதை வீதம் எழுதித் தந்ததாகத்தான் ஞாபகம் என்று பிரமிள் என்னிடம் தெரிவித்திருக்கிறார். அவற்றில் சில கதைகளை இப்போது வெளியாகியுள்ள 'பிரமிள் படைப்புகள்' இரண்டாம் தொகுப்பில், 'இளையோர் கதைகள்' என்ற 'யாழ் கதைகள்' பகுதியில் காணலாம். அச்சில் வெளிவராமல் கையெழுத்து இதழாக வெளிவந்தவற்றிலிருந்து சில கதைகளை அமரசிங்கம் இத்தனை காலமாகப் பாதுகாத்து வந்திருக்கிறார் என்பதை நினைத்தால், அவருக்கு பிரமிளின் மேலிருந்த அபிமானம் தெரியவருகிறது.

பிரமிளுக்கு 1957-59 ஆண்டுகளில், பதினெட்டு பத்தொன்பது வயதில் இருந்த எழுத்தாற்றல், அவரது பிற்கால எழுத்துக்களின் வீச்சை இனம் காட்டுவதாயிருக்கிறது. பெயரை மாற்றி மாற்றி எழுதும் வழக்கம் சிறுவயதிலேயே தொடங்கிவிட்டதை, லஷ்மி ஜோதி, பின்பு தூய தமிழ்நேயனாக இலக்குமீ இளங்கோ போன்ற பெயர்களை அவர் பயன்படுத்தி இருப்பதிலிருந்து அறியமுடிகிறது.

இளமையின் விடலைத்தனத்தை, பிள்ளைப்பிராய பயத்தின் சூழ்நிலைக் காரணங்களை, அவர் இக்கதைகளில் எடுத்தாண்டுள்ளார். பகுத்தறிவுக்கு ஏற்ப விவரிப்பதும், சரளமான சொல்முறையும், சுவாரஸ்மாகக் கதை சொல்லும் முறை கைவந்திருப்பதும் இக் கதைளில் அறியமுடிகிறது என்பதைத் தவிர, இன்றுஇவைகளுக்கு இலக்கிய மதிப்பு பெரிதாக ஏதுமில்லை. சில வாழ்க்கைக் குறிப்புகள் இவற்றில் இருந்து கிடைக்கின்றன.

'எழுத்து' பத்திரிகையில் 1960-இல் எழுத ஆரம்பிப்பதற்கு முன்பே, பிரமிள் சிதம்பரத்திற்கு வந்து போயிருக்கிறார் என்பது தெரிகிறது. (அப்போது சிதம்பரத்திலிருந்த மௌனி பற்றி அவருக்குத் தெரியாது. பின்பே, மௌனியின் அறிமுகம் ஏற்பட்டு, அவரது சிறுகதைத் தொகுப்புக்கு தமது புகழ்பெற்ற முன்னுரை மூலம் சிறப்புச் சேர்த்தார்.) அங்கே ஹைஸ்கூல் தமிழ் வாத்தியாராக இருந்த, சின்னம்மா மகனாரான ஒரு தமையனார் பற்றி (அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் விரிவுரையாளராக இருந்த தம்பிராஜா என்ற ஒன்றுவிட்ட அண்ணன்) ஒரு குறிப்புக் கிடைக்கிறது.

'தீப்பந்தம்' அவருடைய கிண்டலும் கேலியுமான விமர்சன நோக்கின் ஆரம்பம்.'கதவைத் தொட்ட கை' பின்பு 'கதவைத் தொட்ட நிழல்' என்று தலைப்பு மாற்றம் செய்யப்பட்டது. இது ஓர் உள்ளார்ந்த விபரீத உணர்வை ருசிகரக் கதை வடிவில் சொல்வது. இந்த இரு தன்மைகளும் பின்பு பிரமிளிடம் இணைகின்றன.

பிரமிளின் கதைத்தொகுப்பைத் தொகுத்து 2007-இல் நான் வெளியிட்ட பின்பு, புதுமைப்பித்தன் கதைகளுக்குப் பிறகு, அந்த எல்லைக்குத் தமது வீச்சைச் சாதித்த கதைக்காரர் இவர் என்பது தெரியவந்துள்ளது.

ஒரு எழுத்தாளனின் ஆரம்ப எழுத்துக்கள் ஒரு வாழ்க்கை வரலாற்று ரீதியான முக்கியத்துவம் வாய்ந்தவை; அவரது எழுத்து மூலங்களை அறிய உதவுபவை. அவ்வகையில், பிரமிளின் எழுத்துக்கள் அனைத்தும் தொகுக்கப்பட்டு வெளிவந்த அவ்வேளையில், 'யாழ்' கதைகளும் சேர்ந்து வெளிவந்தது மகிழ்ச்சி ஏற்படுத்தியது.

காஞ்சனை ஆர்.ஆர்.சீனிவாசன், தமது விவரணப்படப் பணி நிமித்தம் 2007-இல்இலங்கை சென்றிருந்தபோது, பிரமிள் மீதுள்ள ஈடுபாட்டால், திருக்கோணமலை சென்று ஈழத்தின் சிறந்த கவிஞர் வில்வரத்தினத்தின் உதவியுடன், பிரமிள் பிறந்து வளர்ந்த வீடு இருந்த இடத்தையும் அவரது ஆரம்பகால நண்பரான அமரசிங்கத்தையும் திருக்கோணமலைக் காட்சிகளையும் புகைப்படங்களாகப் பதிவு செய்துகொண்டு வந்தார். அவரிடம் அமரசிங்கம் 'யாழ்' தொகுப்புக் கதைகளின் (படங்களுடன்) டைப்செட் செய்த பிரதியை அளித்து, என்னிடம் இதைச் சேர்ப்பித்து, முன்னுரையுடன் இந்நூலைக்



கொண்டு வர வேண்டும் என்ற ஆசையையும் கூறி, அனுப்பிவைத்திருந்தார்.

2008ஆம் ஆண்டுவாக்கில் அமரசிங்கம் மறைந்துவிட்ட தகவல் கிடைத்து. பிரமிளின் 70-ஆவது நினைவு ஆண்டான 2009-இன் இறுதியில், அவரது அனைத்து எழுத்துக்களையும் அச்சில் கொண்டுவந்துவிட வேண்டும் என்றிருந்த வேளையில், பிரமிளின் இந்த ஆரம்பகாலப் படைப்புகளை, சிறு வெளியீடு என்பதால் நானே 'லயம்' வெளியீடாகக் கொண்டு வந்தேன் என்பது நிறைவைத் தருகிறது.

தமிழில்'Juvenile Literature'என்ற பிரிவு வளரவே இல்லை என்றே சொல்லலாம் - ஓரிரு புனைகதைப் புத்தகங்களைத் தவிர, சில உரைநடை நூல்கள் உள்ளன; கவிதை இல்லை.

இந்த 'யாழ் கதைகள்', இளையோர் கதைப்பிரிவில் அடங்குவதாக இருக்கும்; ஓர் இளையவரால் எழுதப்பட்டதாகவும் விளங்கும்.

3

பத்திரிகையில் பிரசுரமான பிரமிளின் முதல் கதை 'சந்திப்பு'. எழுத்து பத்திரிகையில் வெளிவந்தது. விகாஸ் என்னும் புதுதில்லிப் பதிப்பகம் மூலம் க.நா.சு. தமிழில் சிறந்த சிறுகதைகளைத் தொகுத்து ஆங்கிலத்தில் வெளியிட்டபோது, இக்கதையும் அதில் சேர்த்திருந்தார். அப்புத்தகத்திற்கு மதிப்புரை எழுதியிருந்த 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' புதுதில்லிப் பதிப்பு, தொகுப்பிலேயே சிறந்த கதை அதுதான் எனப் புகழ்ந்து உரைத்திருக்கிறது. தமிழில் சிறந்த சிறுகதை ஆசிரியர்களின் கதைகளுடன் இணைத்து இக்கதையை க.நா.சு. தேர்ந்தெடுத்திருந்தது சர்ச்சைக்குள்ளானது. பிரமிளை கவிஞர் என்று மதிக்காத க.நா.சு. சிறுகதையாளர் என்று சிறப்பித்தது எவ்வாறு?

'எழுத்து'பத்திரிகையில் வெளிவந்திருந்த அக்கதை தன்னுடைய தனித்தன்மையால் தொகுப்பில் சேர்க்க வேண்டிய கட்டாயத்தை ஏற்படுத்தியதாக முன்னுரையில் குறிப்பிட்டிருந்தார் க.நா.சு. அதுவரைக்கும் பிரமிள்நான்கு கதைகளை மட்டுமே எழுதியிருந்தார். அதில் எழுத்து இதழில் வெளிவந்த'கோடாரி' கதை, 'சிந்தனைக் கட்டுரை' என்றே வெளியிடப்பட்டிருந்தது. ஒரு நாவலின் சுருக்கம் போன்று அது தோன்றியது. 'ஞானரதம்' இதழில் வெளிவந்த 'சதுரச்சிறகு' கதை மௌனியின் 'சாவில் பிறந்த சிருஷ்டி' கதாபாத்திரங்களை வேறு நிலையில் வைத்து எழுதிப் பார்த்த கதை. சதங்கையில் வெளிவந்த 'பிக்ஷாடனன்',ஒரு கதை வடிவில் இருந்தாலும், இருவர் விவாதிக்கும் விஷயங்கள் அடங்கிய கட்டுரையாகவே அதை அவர் எழுதியிருந்தார்.எனவே, பிரமிள் எழுதிப் பிரசுரமான ஒரே ஒரு கதை, சிறந்த சிறுகதையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது கவனத்திற்குரியது.

இரண்டாவது கதை, 'எழுத்து'வில் வெளிவந்த 'கோடாரி'.இது இலங்கைப் பிரச்சினையின் அடிப்படை ஒன்றை அலசுகிறது. சி.சு. செல்லப்பா இதை பிரமிள் எழுதிவரும் ஒரு நாவலின் சுருக்கப் பகுதி என்று குறிப்பிட்டு வெளியிட்டிருந்தார். ஆலமரங்களைத் தறித்து பௌத்தப் பெரும்பான்மையைக் கிளர்ச்சியுற வைத்த தமிழர்களின் தூண்டுதலும் பொதுவாக ஓர் இனக்கலவரம் எழும் சூழல் வர்ணனையும் இக்கதையில் இறுக்கமான நடையில் விவரிக்கப்பட்டிருக்கிறது.

இவ்விரு கதைகளைத் தவிர எழுத்துவில் 'ஏழு கதைகள்' என்னும் தலைப்பில் உருவகக் கதைகளும், 'ஒற்றைத் தென்னை' என்னும் ஒரு 'ஸ்கிட்' வகையும் மட்டுமே வெளிவந்திருக்கின்றன.

பிரமிளை ஆசிரியராகவும் என்னைப் பதிப்பாசிரியராகவும் கொண்டு வெளிவந்த படிமம் இதழில் பிரசுரமானது 'பாறை'. ஓர் இலக்கியப் பத்திரிகைக் குழுவையும் பெண்ணிய எழுத்தாளர் ஒருவரையும் நையாண்டியாகச் சித்தரிக்கும் கதை இது.

'காடன் கண்டது' பிரமிளின் சிறந்த கதைகளில் முதன்மையானது. சில கதைத் தொகுப்புகளிலும் சேர்க்கப்பட்டுள்ளது. இலங்கைப் பின்னணியில் கதை நடந்தாலும் அது மறைக்கப்பட்டு தமிழ் நாட்டுக்கும் பொருத்தமாக எழுதப்பட்டுள்ளது. தன்னைச் சூழ்ந்து அமர்ந்துள்ள நபர்களிடம் ஒரு குறவன் இனக்குழு பாணியில் கதை சொல்வதாக, ஓர் ஆதியான கதை சொல்லல் முறையில் அமைந்துள்ளது. இக்கதை, தி.ஜானகிராமன் 'கணையாழி' பத்திரிகையில் ஆசிரியராக இருந்தபோது, அதில் வெளியானது. தமிழ்க் கதைகளில் படைப்பு ஆழமும் விமர்சனக் கூர்மையும் கொண்ட அபூர்வமான கதையிது.

ஒரே மூச்சில் எழுதப்பட்ட மிகச் சிக்கலான கதைக்கருவைக் கொண்ட 'ஆயி'குறுநாவல்,

கணையாழி குறுநாவல் போட்டிக்கு அனுப்பப்பட்டு (அசோகமித்திரன் அப்போது அதன் பொறுப்பில் இருந்ததால்) பிரசுர வாய்ப்பும்கூட மறுக்கப்பட்டு, பிறகு நீண்ட காலம் கழித்து 'லயம்' வெளியீடாகத் தனிநூலாக வெளிவந்தது. 'அஃக்' வெளியிட்ட பிரமிளின் முதல் கவிதைத் தொகுப்பான 'கண்ணாடியுள்ளிருந்தது'நூலின் பின்னட்டை ஆசிரியர் குறிப்பில், அவர் 'மாகாளி' என்ற திரைக்கதையை அமைத்து வருவதாக ஒரு குறிப்பு வெளிவந்துள்ளது. அப்போது அந்தத் திரைப்பட வாய்ப்பு குலைந்து போனதால், அக்கதை மனத்தில் கருவாகவே இருந்தது பின்பு 'ஆயி' ஆகப் பிறந்திருக்கிறது. 'கன்யாகுமரி மாயி'யை 'ஆயி'யாக உருமாற்றியிருக்கிறார் பிரமிள். சில கதாபாத்திரங்களுக்கிடையில் நிகழும் உரையாடலாக ஒரு பழைய பாணியில் இக்கதை சொல்லப்பட்டு உள்ளது.

பிரமிளின் சில கதைகள் உரையாடல் வழியாகவே கதை சொல்லலாக வளர்ச்சியடைவது கவனத்துக்குரியது. அதிநவீனத்துவ எழுத்தாளர்கள் இதுபோன்ற பழம்பாணிகளைப் புதிய உத்திகளாகக் கையாண்டு வருவதும் இங்கு கவனத்திற்குரியது. சில இலக்கியவாதிகளைக் குறியிட்டுக் காட்டுவதாக இந்த 'ஆயி' கதை அமைந்தாலும், பூதப்பாண்டியில் பிரமிள் சிலகாலம் வசித்துவந்தபின்னணியின் அத்தென்தமிழ்நாட்டுச் சூழலும், கற்பனையாக உருவாக்கப்பட்ட உரையாடல் நடையும் இக்கதைக்குத் தனிச்சுவை தருகின்றன.

'தினமணிகதிர்' பத்திரிகையில் 'கணையாழி' கி. கஸ்தூரிரங்கன் பொறுப்பாசிரியராக இருந்த போது, வாரம் ஒரு கதையாக, ஒரு மாதத்திற்கு ஓர் எழுத்தாளர் வீதம் எழுதி வந்தனர். அப்படி வந்த பிரமிள் கதைகள்தான் 'மெஹரா', 'பாண்டிபஜாரைக் கலக்கியவன்', 'லங்காபுரி', 'லங்காபுரி ரகஸ்யம்', 'லங்காபுரி ராஜா' போன்ற கதைகள். வெகுஜனப் பத்திரிகை ஒன்றில் பிரமிள் எழுதிய ஜனரஞ்சக எழுத்து வகையின் முதல் கதையான 'மெஹரா', உணர்ச்சிகரமான ஒரு காதல் கதை. அடுத்த கதை ஒரு நகைச்சுவை கதையாக அமைந்தது. பின்பு தீவிரமான 'லங்காபுரி ராஜா' என்ற குறுநாவலைத் தனித்தனிச் சிறுகதைகளாக, மூன்று பகுதிகளாக மாற்றி எழுதி ஓர் உயர்ந்த மனோநிலையில் அத்தொடரை உச்சகதிக்குக் கொண்டு சென்று முடித்தார்.

'லங்காபுரி ராஜா' அம்மாத இலக்கியச் சிந்தனைப் பரிசைப் பெற்றது. இலங்கைப் பிரச்சினையை இந்த அளவுக்கு அழகாகவும் ஆழமாகவும் தீவிரமாகவும் குறியீட்டு முறையில் சித்தரித்த கதை எதுவுமில்லை என்றே கூறலாம். இதைச் சிங்களத்தில் மொழிபெயர்க்க வேண்டுமென்ற பிரமிளின் ஆசை நிறைவேறவில்லை.

'லங்காபுரி'யில் அடிப்படையான ஒரு பிரச்சினையின் ஆரம்பம் கோடிட்டுக் காட்டப்படுகிறது. கோபாலகிருஷ்ணனின் சர்வே கேம்ப்பில் தங்கி அவரது பராமரிப்பில் சில காலம் வசித்து வந்தார் பிரமிள். அப்போது உண்மையாகவே நிகழ்ந்தது படுக்கையில் தூங்கும் அந்த உடும்பு நிகழ்ச்சி. அதைக் குறியீட்டு முறையில் கதைப்படுத்தி இருக்கிறார். உடும்பு போன்ற ஒரு ஜீவன்கூட, தான் இருந்த இடத்தை விட்டுக் கொடுக்காமல் உரிமை கொண்டாடும்போது, மனிதர்களின் உணர்ச்சி என்னவாக இருக்கும் என்பதைச் சொல்லாமல் சொல்கிறது கதை. ஆனால், ஆழ்ந்து வாசிப்பவர்களாலேயே இந்தச் சரட்டைப் பின்பற்றிச் செல்லமுடியும்.

விடுதலைப்போராட்டத்தின் குறியீடாக 'ராஜா' வருகிறது. 'பணா முறா ராஜா' என்ற உண்மை யானையின் மறு வார்ப்புத்தான் அது. இக்கதையில் அது மனதில் ஆழப்பதியும் வலிமையான குறியீடாகிறது. இக்கதை புத்தகமாகவும் வெளிவந்து சிலகாலம் கழித்து, 'இலங்கை யானைகளுக்குப் பொதுவாகத் தந்தங்கள் கிடையாது' என்று நான் ஏதோ ஒரு புத்தகத்தில் படித்த குறிப்பை வைத்துக்கொண்டு கேட்ட போது, அவர் ஒப்புக்கொண்டார்.

குட்டியாக இருந்தபோது இந்தியாவில் இருந்து இலங்கைக்குச் சென்ற யானை அது என்று கதையோட்டத்தை மாற்றி ஒரு புதிய திருகலைக் கொடுப்பதாகச் சொல்லியிருந்தார். ஆனால், அம்மாற்றம் செய்யப்படவில்லை. இக்குறுநாவல் நூலுருப் பெறும்போது கோபாலகிருஷ்ணன் ஒரு விடுதலை இயக்கத்தினரால் தற்செயலாகக் கொல்லப்பட்டார். எனவே, 'தந்தம்' என்று பின்னுரையை உத்வேகத்துடன் எழுதி நூலில் சேர்த்துவிட்டார் பிரமிள். ஆனால், அந்த இயக்கம் அவர் நினைத்ததுபோல் முதன்மையாக இருந்த 'விடுதலைப் புலிகள்' இயக்கம் அல்ல என்றும் வேறோர் இயக்கம் என்றும் தெரிந்தது. இதையும் மாற்றியமைத்து எழுத நினைத்திருந்தார். இந்த மாற்றங்கள் இல்லாமலேயேஇக்கதை தொகுப்பில் இடம்பெற்றது.

பிரமிளின் சில புத்தகங்கள் வெளியிட உறுதுணையாக இருந்தவர் கோபுல்ஸ்ரீ என்னும் வி.எஸ்.சத்யா. இவர் பிரமிள் மறைந்ததற்கு அடுத்த ஆண்டு மறைந்தார். இவருடைய கதைகள் ஜனரஞ்சகமானவை. ஆனால், ஆரோக்கியமானவை. இந்தியத் தன்மையில் ஊறிப் பிறந்தவை. இவர் ஒரு சமயம் சில அபூர்வ நிகழ்ச்சிகளைத் தொகுத்தது ஒரு கதை எழுதியிருந்தார். ஆனால், அது நன்றாக வரவில்லை. அதில் எழுதியிருந்த ஒரு நிகழ்ச்சியை நேரில் அவர் விவரித்தார். அது பிரமிளின் மனத்தில் ஆழ்ந்த பாதிப்பை ஏற்படுத்தவே அதை ஒரு கதையாக எழுதுவதற்கு அனுமதி கேட்டுக்கொண்டு 'கருடனூர் ரிப்போர்ட்' என்னும் சிறுகதையை எழுதி 'தினமணிகதிர்' பத்திரிகையில் வெளியிட்டார்.

கேட்டதற்கும் உருப் பெற்றதற்கும் பல காததூரம் வித்தியாசம். கதையில் ரசவாத மாற்றம் இப்படித்தான் நிகழவேண்டும். ஊரின் தாதா அந்த முரடன்; பணம் கொடுத்து வட்டி வாங்குபவன். ஒரு பெண்ணிடம் கொடுத்த பணம் அவளுடைய வறுமையால் திரும்ப வராதபோது, அவன் தன் கையில் இருந்த வீச்சரிவாளால் அவள் கழுத்திலிருந்த தாலியைப் பறித்துச் சென்றான். ஆனால், அன்றே அவ்வீட்டின் முன்பு அவன் ஒரு லாரியில் அடிபட்டுச் செத்தான். அவன் பையிலிருந்த தாலியும் வெளியே வாசலில் விழுந்து கிடந்தது என்பதுதான் நிகழ்ந்த கதை. இதைத்தான் கருடனூர் என்ற ஊரைக் கற்பித்து,



கருடனைப் பற்றிய தொன்மத்தை உருவாக்கி, யோகி ராம்சுரத்குமாரையும் உள்ளே கொண்டுவந்து அற்புதமான ஒரு கதையாக்கி இருக்கிறார் பிரமிள்.

இயற்கை இகந்த அற்புத நிகழ்ச்சி ஒன்று, அதற்கு நேர்மாறான எந்திரத்தனமான ரிப்போர்ட் வடிவில், ஒரு போலீஸ்காரர் மூலம் கதையாகச் சொல்லப்படுகிறது. இதில் வரும் சமூகப் பிரதிநிதிகளுடைய சித்திரிப்பும் கவனத்திற்குரியது. சாதுவான பூசகர், இன்றைய அரசியல் கட்சி கோஷ்டித் தலைவர்களைப் போன்று பகுத்தறிவு வாதம் பேசுகிற திமிலோகம் என்ற அடாவடிக்காரன், ஜாதிப் பிரச்சினை, ஆன்மீகச் சேர்க்கை என்று ஜனரஞ் சமாக வந்து பிரமாதமான கதையாக மாறியிருக்கிறது இச்சின்னஞ்சிறு கதை. இந்தக் கருவின் வளர்ச்சி அவரிடம் தொடர்ந்து இருந்து வந்ததை, பின்பு ஒரு தொலைக்காட்சி நாடகமாகவும் அதுவும் போதாமல் ஒரு தொடர்கதையாகவும் வெவ்வேறு வேடங்களில் இக்கதை வளந்ததை வைத்து உணர முடிகிறது.

பால்ராஜ் கென்னடி என்ற வாசகர் (இப்போதைய திரைப்பட ஒளிப்பதிவாளர்), மதுரையில் தனது திருமண நிகழ்ச்சியில், 'வீடு' என்றொரு இலக்கியத் தொகுப்பை வெளியிட்டார். அதில் சேர்ப்பதற்காகக் கவிதை ஒன்று கேட்டபோது அனுப்பி வைத்த சின்னஞ்சிறு கதைதான் பிரமிளின் சிறந்த சிறுகதையான 'நீலம்' எதிர்பாராதவிதமாக 'லங்காபுரி ராஜா' நூலில் 'பிரஸன்ன'மும் இதுவும் சேர்ந்த வந்தபோது 'நீலகண்ட'மும் 'நீலகாச'மும் ஆச்சரியப்படும் வகையில் தொடர்பு காட்டின.

தண்ணீருக்குள் மட்டும் மலரும் நீலோத்பலம் பற்றிய ஒரு தகவலை வைத்துக்கொண்டு ரசவாதக் குறியீடுகளின் அடிப்படையில் ஒரு மனமாற்றத்தை விவரிக்கும் கதை 'நீலம்'. சொல்லாமலேயே சொல்லப்படும் விஷயங்கள் இக்கதையில் அதிகம். இதுபோன்ற சில சின்னஞ்சிறு கதைகளை எழுதவேண்டும்என்றும் பிரமிள் நினைத்திருந்தார். சில கதைக் கருக்களை விவரித்ததுகூட ஞாபகத்திற்கு வருகிறது.

ஒரு சாதாரண மெட்ராஸ் ஆர்ட்டிஸ்ட் ஒரு ரசவாத மாற்றத்திற்கு உட்படுகிறார். கிரியா ஊக்கியாக விளங்குகிறார் பஸ்ஸில் வந்தவர். இவர் ஆசிரியராகவே சாயல் காட்டுகிறார். தான் இறங்கவேண்டிய நிறுத்தத்திற்கு மேலே டெர்மின்ஸ் வரை சென்று, எங்கோ அழைத்துச் செல்லப்பட்டு, சகஸ்ராரத்துக்கு மேலே உள்ள நீலகாச நிலையை அடைதல் போன்ற தற்செயல் நிகழ்வுகளை இக்கதை கூறுகிறது.பிரக்ஞையுடன் ஆசிரியரால் இக்குறியீடுகள் இந்தக் கதையில் இணைக்கப்படவில்லை. இதன் முதல் டிராஃப்ட் சாதாரணமான ஒரு கதையாகத்தான் இருந்தது. இரண்டாவது டிராஃப்டில் இப்படி ஒரு ரசவாத வித்தையை அது காட்டியது நான் நேரில் இருந்து பார்த்த ஓர் அனுபவம்.

சுந்தரராமசாமியின் 'ஜே.ஜே.சில குறிப்புகள்' நாவலை பிரமிள் கடுமையாக விமர்சித்து எழுதியிருக்கிறார். மலையாள, கிறிஸ்துவப் பின்புலங்கள், நிகழ்ச்சி வடிவம் பெறாத கருத்துச் சொல்லாடல்கள் என்று அதன் தப்பித்தல் தன்மையை உணர்த்தியிருக்கிறார். சு.ரா. எழுதியிருக்க வேண்டியது அவரது வாழ்வு மற்றும் சூழ்நிலை அனுபவத்தில் இருந்து பெற்ற இந்த வகைக் கதையைத்தான் என்று காட்டுவதைப் போல், 'பிரஸன்னம்' என்ற குறுநாவலின் முதல் பகுதியை மட்டும் முதலில் அவர் எழுதினார். 'பிரஸன்னம்' ஒரு சமூக விமர்சன வெளிப்பாடாக தீவிரம் பெற்றுள்ளது. அதன் படைப்பு ஈர்ப்பு, விஷமத் தனத்தை மீறி ஆன்மீகத் தளம் வரை பிரமிளை இழுத்துச் சென்று பன்முகப் பரிமாணங்களைக் காட்டியுள்ளது.

நான் 'லங்காபுரி ராஜா' நூலை வெளியிட திட்டமிட்டுச் சில முக்கியக் கதைகளைத் தேர்ந்தெடுத்து, அச்சிடும் பொறுப்பை பிரமிள் வசமே ஒப்படைத்திருந்தேன். அதன் முதல் கதையாக பிரஸன்னத்தின் முதல் பகுதி மட்டும் இருந்தது. புத்தகம் உருப்பெறும்போதே அதை நீட்டி எழுதி மேலும் இரு பார்வைகள் மூலம் வேறு பரிமாணத்திற்கு உட்படுத்தினார். கடைசியில் 'நீலகண்டம்' உள் நுழைந்து பிரமிக்க வைக்க, மெட்டாபிசிகல் ரியலிசம் என்னும் ஒரு தளத்திற்கு கதையை எடுத்துச் சென்றிருந்தார் பிரமிள். பின் நவீனத்துவ உத்திகளும் உத்திகளும் இதில் அபாரமாக இணைந்துவிட்டன.

'குதிரைமலை நிகழ்ச்சி' ஒரு விஞ்ஞான ஃபேன்டஸி கதை. அவரது நண்பரான டேவிட் சந்திரசேகர் ஒரு விபத்தில் சிக்கிக்கொண்டார். அவரும் பிரமிளும் முன்பு பைக்கில் குதிரைமலைக்குச் சென்று வந்திருக்கிறார்கள். இவற்றை இணைத்து இக்கதையை எழுதினார். சிலகாலம் கழித்த சிறுநீரக மாற்று அறுவை சிசிச்சை செய்தும் பிழைக்காமல் டேவிட் மறைந்தார். அவருடைய நினைவாக

இக்கதை மிஞ்சியது.

சென்னையில் ஏராளமாகத் திரியும் உதவி இயக்குநர்களிடமிருந்து தானறிந்தவற்றை வைத்துக்கொண்டு பிறந்தது 'கிசு கிசு' கதை. துரை என்கிற கவிஞர் வித்யாசங்கரின் சில அனுபவங்கள் இதில் வருகின்றன. இதில் வரும் மார்க்ஸ் ஒரு மறக்கமுடியாத அங்கதச் சித்திரிப்பு.

'கருட யோகி' கதை மீண்டும் கருடனையும் யோகியையும் இணைக்கிறது. இலங்கையில் கேட்டறிந்த ஒரு சம்பவத்தை இதில் மடை மாற்றியிருக்கிறார் பிரமிள். சாது அப்பாத்துரை வரலாற்றில் ஓரிடத்தில் அவருக்கும் அவரது மருமகனுக்கும் நடந்த லௌகிகப் பிரச்சினை ஒன்று விவரிக்க முடியாத சம்பவமாகச் சுட்டிக் காட்டப்படுகிறது. அதுதான் இக்கதையின் ஊற்று.

'அசரீரி' தமிழின் முதல்தர சுத்த சுயம்புவான சயன்ஸ் ஃபிக்சன் கதை. இதில் சமூகப் பிரச்சினையுடன் விஞ்ஞானத் தீர்வையும் சேர்த்துக் காட்டியிருக்கிறார். தினமலர் பத்திரிகையின் ஒரு திருமண விளம்பரத்திலிருந்து உத்வேகம் பெற்றுப் பிறந்த கதை இது.'ஆலா' இலங்கையில் நிஜத்தில் வாழ்ந்த ஒரு விபரீதக் கவிஞரைப் பற்றிய உண்மை நிகழ்ச்சிகளைக் கொண்டு கட்டப்பட்ட நையாண்டிக் கதை. மேடைப்பேச்சின் விபரீதமும் வெடிகுண்டு விபத்து கூட உண்மையில் நிகழ்ந்தவைதாம்.

'அங்குலீ மாலா' பிரமிளின் இன்னொரு சாதனைக் கதை. விமான விபத்தில் தப்பும் ஒரு போராளியைப் பற்றி 'சீலன்' என்ற பெயரில் ஒரு சிறு கதையை எழுதிப் பிரசுரிக்காமல் அவர் பலகாலம் வைத்திருந்தார். ஒரு கதையாக உருப்பெறாததால் அப்படிக் கிடந்த அதை, பிறகு விரித்தெழுதி, 'அங்குலீ மாலா' என்ற குறியீட்டையும் கொண்டுவந்து சிறப்பாகப் பொருத்தியிருக்கிறார்.'லங்காபுரி ராஜா'வில் யானை போராட்டத்தின் குறியீடாக வருகிறது.'அங்குலீ மாலன்' குறியீடோ பிரமிளையே குறிப்பதாக வருகிறது. ஆல்பர்ட் காம்யூவின் கட்டுரையில் 'சிசிபஸ்' கதை ஒரு குறியீடாகப் பயன்பட்டிருப்பது போல் வீரியத்துடன் இந்த அங்குலீ மாலன் கதை குறியீடாக்கப்பட்டுள்ளது. அதில் வரும் குழந்தைப் பருவ நிகழ்ச்சிகள் பல உண்மை அனுபத்தை அடிப்படையாகக் கொண்டவை.

'சாமுண்டி', சென்னைத் தெருவில் திடீரென்று பார்த்த ஒரு நிகழ்ச்சியின் பாதிப்பில் எழுந்தது. சாக்கடை அடைப்பை நீக்கிவிட்டு, தலையில் இருந்து மலம் உடல் முழுவதும் வழிய எழுந்து வந்த ஒரு துப்புரவுத் தொழிலாயைப் பார்த்த அதிர்ச்சிமனதுக்குள்ளேயே இருந்து, நீண்ட காலம் கழித்துப் பிறந்தது இக்கதை. அசுத்தத்தையும் அசிங்கத்தையும் போற்றிச் சாருநிவேதிதா போன்ற சிலர் எழுதியதும், முனியாண்டி என்று பெயர்களை வைத்துக்கொண்டதும், இக்கதைக்குப் பின்னணியாகும். இதில் வரும் மெய்யன் என்ற ஆசிரியர் பிரமிளின் இளமைக்காலத்தில் அவருக்கு உண்மையில் ஆசிரியராக வாய்த்தவர்தான். அய்யப்பன் ரயிலில் கேட்கும் ஒருவரின் பேச்சிலும் சாயலிலும் ('நீலம்' கதையில் பஸ்ஸில் அருகமர்ந்து பேசி வருபவரும்) பிரமிள் தன்னையேபிரதி பலிப்பது தெரிகிறது.

சாமுண்டி ஒரு பெண் தெய்வப் பெயராயினும் ஆணுக்கும் உரியதாக இருக்கிறது. ஒரு நிகழ்விலிருந்து கதையை எப்படியெல்லாம் கட்டியெழுப்ப முடியும் என்பதற்கு உதாரணமாக விளங்கும் கதை இது. கடைசியாக எழுதிய இது அச்சில் வெளி வருவதற்கு முன்பே பிரமிள் மறைந்துவிட்டார். பிறகு 'லயம்' நினைவு இதழில் வெளியிடப்பட்டது.

பிரமிளின் எந்தவொரு கதையிலும் ஓர் அவதானத்தின், ஓர் அனுபவத்தின் கூறு கலந்திருக்கும்; மாற்றம் பெற்றிருக்கும். எதனுடனும் ஒட்டாத ஒன்றைக் கூட மற்றொன்றுடன் பொருத்தமாக இணைக்கும் திறமை அவருக்குண்டு. தனித் தனியானவற்றில் ஓர் ஒருங்கிணைப்பை அவர் ஆச்சரியமூட்டும் வகையில் செய்துவிடுவார். 'கோடரி', 'லங்காபுரி ராஜா', 'ஆயி', 'பிரஸன்னம்' போன்ற எல்லா வற்றையும் இணைத்து ஒரு நாவல் எழுதும் திட்டத்தைக் கூட பிரமிள் கூறி வந்திருக்கிறார்.

'காடன் கண்டது' கதையில் ஓணானைத் தின்பதாக ஒரு தகவல் வரும். அப்படிக்கூட இருக்கிறார்களா என்று நான் சந்தேகப்பட்டுக் கேட்டிருக்கிறேன். பிறகு நான் வாழ்ந்த ஊரில் நிகழ்ந்ததொன்று அது உண்மைதான் என்பதைப் புரியவைத்தது. வேறோர் ஊருக்கு மணம் செய்விக்கப்பட்ட ஒரு பெண் இங்கே திரும்பி வந்திருந்தபோது, வேலிகளில் ஓணானின் சரசரப்பைக் கேட்டதும் நின்று ஒருவிதமாகத் திரும்பிப் பார்ப்பாளாம். பிறகுதான் தெரிந்தது புகுந்த ஊரில் ஓணான் களைத் தின்னும் பழக்கம் இருந்திருக்கிறது என்று. அந்தப் பழக்கம் அவளையும் தொற்றிக்கொள்ள இங்கு கேலிக்குரியதாக மாறியது அது.

சிறுபத்திரிகை எழுத்தாளர்கள் வெகுஜனப் பத்திரிகைகளில் எழுதுவதில் பல்வேறு வகைமாதிரிகள் உள்ளன. தன்னுடைய சிறுகதைப் பாணி எழுத்துகளையே தீர்ந்துபோன வகையில் எழுதிய அசோகமித்திரன் போன்றோர் ஒரு வகை; இருவகைப் பத்திரிகைகளிலும் ஒரே மாதிரி நடுத்தரத்தில் எழுதும் சுப்ரபாரதிமணியன், பாவண்ணன் போன்றோர் இன்னொரு வகை; சிறுபத்திரிகையில் எழுதி முழுமையாக வெகுஜன எழுத்துக்களை எழுதுபவர்களாக மாறிய பாலகுமாரன், பிரபஞ்சன் போன்றோர் வேறொரு வகை. சிறுபத்திரிகை எழுத்தில் தந்த அதிர்ச்சிகளையும் புதுமைகளையும் பெரும்பத்திரிகைகளில் மாற்றிக்காட்டி வெகுஜனப் பத்திரிகையின் எழுத்துக்களையே வேறுவிதத்தில் எழுதி வரும் சாருநிவேதிதா போன்றவர்கள் மற்றொரு வகை. எழுதிக் குவிக்கும் திறமையுள்ளவர்களால்தான் வெகுஜனப் பத்திரிகையில் நிலைத்து நிற்கமுடியும்.

பெரும்பத்திரிகைகளில் ஜனரஞ்சகமான, அதே நேரம் ஆரோக்கியமான எழுத்துக்களை எழுதுவதில் பிரமிளுக்குத் திறமை இருந்தது. அதை ஒரு சவாலாகவே மேற்கொண்டார். வாய்ப்புகள் தேடி வந்தபோது மட்டும் அப்படி எழுதினார். தானாக நாடிச்செல்ல அவர் முயலவில்லை. இப்படி வெகுஜனப் பத்திரிகைகளில் எழுதினால்

மற்றவர்களுக்கு நேர்ந்ததுபோல் தனக்கும் எழுத்துத் திறமை பாதிக்கப்படும் என்ற பயம் அவரிடம் இல்லை. எழுத்தை ஒரு மூலதனமாக்க அவர் விரும்பியதுமில்லை. இப்படி 'தினமணி கதிர்', 'அரும்பு', 'பசுமை' போன்ற பத்திரிகைகளில் கஸ்தூரிரங்கன், ஆ. அமிர்தராஜ், விஷ்ணு நாகராஜன் போன்றோரின் அநுசரணையால் இவ்வகைக் கதைகளை அவர் எழுதியிருக்கிறார். பெரும்பத்திரிகைகளில் தொடர்ந்து நிறைய எழுதியிருந்தாலும் தான் பிறரைப்போல் மாற்றம் பெறாமலேயே இருந்திருப்பேன் என்றும்கூட உறுதி கூறியிருக்கிறார்.

கட்டுப்பாடும் எழுதும் போக்கில் எதிர்பாராமையும் காட்டுபவை அவருடைய இடைப்பட்ட கதைகள். கட்டுப்பாடற்று, எதிர்பாராதவற்றை எழுப்பிக் காட்டுபவை அவருடைய சிறந்த கதைகள். தொகுப்பில் இவ்விரு வகை எழுத்துகளும் சேர்த்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

ஜனரஞ்சமாக எழுத முடியும் என்று காட்ட எழுதப்பட்ட முதல் கதை 'மெஹரா'. காதல் உணர்வை வெளிப்படுத்தும் அதில் கடைசி வரியில் இலங்கைப் பிரச்சினையில் வாசகர்கள் கவனத்தைக் குவிக்கும் செய்நேர்த்தி கவனிக்கத்தக்கது. அக்கதையின் முன்பகுதி - பஸ்ஸில் சந்திப்பு, சர்வே எடுக்க வீட்டிற்கே சென்றது எல்லாம் உண்மையில் நடந்தவை. பின்பகுதி மட்டும் கற்பனை. ஒருநாள் நாங்கள் சைதாப்பேட்டை, அருகில் சென்றுகொண்டிருந்தபோது திடீரென்று ஒரு வீதி வழியாக ஒரு சந்தில் இட்டுச் சென்றார் பிரமிள். கடைசியில் ஒரு வீட்டுக் கதவில் எழுதியிருந்த விலாசத்தைக் காட்டி இதுதான் மெஹராவின் வீடு என்றார். பிறகு, ஒரு நூலகத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கே பணிபுரிந்து வந்த ஒரு பெண்ணைக் காட்டினார். உண்மையில் அவ்வீட்டில் யாரோ யாரையோ மெஹரா என்று அழைத்ததை, அந்த பெண்ணின் பெயரென அவர் தவறாக நினைத்துவிட்டார். பின்பு தவறு புரிந்து சாந்தி என்பதுதான் உண்மைப் பெயர் எனத் தெரியவந்த நிலையிலும் கதையில் அப்பழைய பெயரையே பயன்படுத்தியிருக்கிறார். மெஹர்பாபாவின் மேலான அபிமானத்தில் வைக்கப்பட்ட பெயர் மெஹரா என ஆயிருக்கலாம்.

'பாண்டிபஜாரைக் கலக்கியவன்' ஒரு விசித்திரத் தலைப்பு. இப்படிப் பெயர் வைப்பது ஒரு ஜனரஞ் சக அதிர்ச்சி உத்தி. பின்பு இதற்கு 'சிறகு' என்று தலைப்பிட்டார். உண்மையில் நிகழ்ந்ததாகக் கேள்விப்பட்ட நிகழ்ச்சி ஒன்றின் அடிப்படையில் பிறந்ததுதான் அது. சிறகு குத்தி மயக்கம் ஏற்பட்டு, பிரச்சினைக்கு ஆளான நிகழ்வு அது.

பெரும்பத்திரிகையில் ஒரு பக்கக் கதைவடிவிலும் ஆரோக்கியமான கதையை எழுதமுடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாக எழுதியது, 'நடிகை மகள்'. திரில்லர்களை நிறையப் படிப்பார் பிரமிள். எனவே, 'டைமண்ட் கிங்' என்ற துப்பறியும் கதை ஒன்றையும் எழுதிப் பார்த்திருக்கிறார். அவருடைய 'ஆயி' போன்ற பல கதைகளில் ஒரு விடுவிப்பு நிலை இறுதிவரை தொடர்வதைக் கவனிக்க முடியும். இது ஒரு மர்மமான ஈர்ப்பைக் கதைக்கு அளிக்கிறது. 'டைமண்ட் கிங்', ஷெர்லாக் ஹோம்ஸ் வகைக் கதை. இதுவும் ஓர் உண்மை நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டது.

ஒரு சமயம் என்னுடைய ஊருக்கு அவர் வந்திருந்த

போது ஒரு நிகழ்ச்சி நடந்தது. அருகிலிருந்த அரிஜனக் காலனியில் திருடர்களின் கல்லெறிச் சம்பவங்கள் சில இரவுகளைப் பரபரப்பாக்கின. கடைசியில் ஒரு காதலன் தன் காதலியை வீட்டுக்குள்ளிருந்து வெளிவர நகசியமாக அழைத்த சம்பவம் விளைவித்த நிகழ்ச்சிக்குப் போக்கு அது என்பது தெரிந்தது. இதை வைத்துக்கொண்டுதான் 'கல்லெறிந்த கதை' என்பதை எழுதியிருப்பாரோ என்பது ஒரு சந்தேகம். நரிக்குறவர்கள் வாழ்க்கையைக் கவனிப்பதில் அவருக்கு ஈடுபாடு அதிகம். அதுவும் இக்கதையில் பொருத்தி வருகிறது. 'வாலிமலை வெளிச்சம்' கதையும் ஓர் உண்மை நிகழ்ச்சியிலிருந்து பிறந்ததே. 'ஆயி' பாத்திரங்களை மீண்டும் இதில் கொண்டுவந்து கதையை நிகழ்த்திக் காட்டியிருக்கிறார். ஒரு சிற்பியின் வாழ்வில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தின் நீட்சியாகப் பிறந்தது 'ஒரு கூழாங்கல்லின் கதை. இப்படிச் சில கதைகளில் திருவண்ணாமலையையும் யோகியையும் கொண்டு வந்திருக்கிறார். 'கார்த்தியும் கம்ப்யூட்டரும்', 'அரும்பு' கம்ப்யூட்டர் சிறப்பிதழுக்காக எழுதப்பட்டுப் பின்பு அதற்குக் கொடுக்காமல் வைத்திருந்த சிறுவர் கதை. அவர் மறைவுக்குப் பின் 'தினமணிகதிர்' சிறுவர்மணியில் சிறப்புக்கதையாக வெளிவந்தது.

4

தமிழில் மொழிபெயர்ப்பு என்பது, சகட்டுமேனிக்கு நிகழ்ந்து கொண்டிருக்கிறது. போர்ஹேயின் கதைகள், உயிரற்று வறட்சியாக மொழிபெயர்க்கப்பட்டு வாசகர்களுக்குக் கிடைத்திருப்பது மிகவும் துரதிர்ஷ்டவசமானதாகும். பிரமிள் நிறைய மொழிபெயர்த்திருந்தும், அவற்றில் பெரும்பான்மையும் பிரசுரம் பெறாமல் போய்விட்ட நிலையில், தொகுப்பு நூலிலுள்ள படைப்புகள், அவரது மொழிபெயர்ப்புத் திறமைக்குச் சான்றாக அமையும்.

போர்ஹேவைத் தமிழுக்கு அறிமுகப்படுத்தியதில், பிரமிளின் 'வட்டச்சிதைவுகள்' மொழிபெயர்ப்பு ஒரு தனியிடம் வகிக்கிறது. இலக்கிய வட்டம் பத்திரிகையில், போர்ஹேயின் 'பாபிலோனில் லாட்டரி' கதையை முதலில் மொழிபெயர்த்து வெளியிட்டவர் க.நா.சு. போர்ஹேயின் 'லேபிரிந்த்ஸ்' என்ற ஆங்கில மொழிபெயர்ப்புப் புத்தகம் வெளிவந்தபின், அந்நூலின் முன்னுரையை 'கசடதபற' இதழ் மொழிபெயர்த்து வெளியிட்டது. இவற்றுக்குப் பின்பே, கடசதபறவில் 'வட்டச் சிதைவுகள்' வெளிவந்தது. போர்ஹேயின் தொனியும் நடை நுட்பமும் அதில் அப்படியே புத்தாக்கம் பெற்றிருந்தன. கசடதபறவினரும் - குறிப்பாக மௌனியும் - இக்கதையை மொழிபெயர்க்கவே முடியாது என்று கருதியதை சவாலாக ஏற்றுக்கொண்டு, பிரமிள் இதைச் செய்திருக்கிறார். தமிழில் கொண்டு வரவே முடியாது என்று மௌனி குறிப்பிட்டவற்றை - 'Unanimous Night' என்ற பதத்தை, 'ஏகோபித்த இரவு' என்று - பிரமிள் மொழிபெயர்த்திருந்தமை குறிப்பிடத்தக்கது.

போர்ஹே மறைந்த சமயத்தில், அவருக்கு ஒரு நினைவு இதழை 'லயம்' வெளியிட்டது. அதற்கு, 'போர்ஹேயும் நானும்' என்ற கதையை பிரமிள் மொழிபெயர்த்துத் தந்தார். இந்த இரு கதைகளும் இத் தொகுப்பில் சிறப்பான இடத்தைப் பெறுகின்றன எனலாம்.

பிரமிளை ஆசிரியராகவும் என்னை வெளியீட்டாளராகவும் கொண்டு, 'படிமம்' (1981) என்ற பத்திரிகையைக் காலாண்டுக்கு ஒருமுறை வெளியிடலாம் என்று ஆரம்பித்தோம். முதல் இதழில் சிலரது கவிதைகள் தவிர, பெரும்பாலும் பிரமிளின் படைப்புகளும் அவரது மொழிபெயர்ப்புகளும் தான் வெளிவந்தன. வசதிக்குறைவால் பத்திரிகை முதல் இதழோடு நின்றுபோனது. காம்யூ, நபக்கவ், எஸ்லின், மெக்னீஸ் ஆகியோரின் எழுத்துகளிலிருந்து சிறுசிறு பகுதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு அதில் வெளியாயின. இலக்கியமாகும் அளவுக்குச் சர்வதேசச் சதிப்பிரச்சினைகளை வைத்து மர்ம நாவல்களை எழுதியுள்ள எரிக் ஆம்ப்லரின் நாவலிலிருந்து, ஒரு பக்கக் கதையாக ஒரு சிறு பகுதியும் வெளியானது. இவை யாவும் 'விடுதலையும் கலாச்சாரமும்' (2009) என்ற மொழிபெயர்ப்புக் கதைகளும் கட்டுரைகளும் அடங்கிய சிறு தொகுப்பு நுலில் சேர்த்து வெளியிடப்பட்டன.

பிரமிளின் வாசகரும் நண்பருமான கவிஞர் ஆ.அமிர்தராஜ் என்ற கிறிஸ்துவ துறவியின் பொறுப்பில், 'அரும்பு' என்ற கிறிஸ்தவ இளைஞர் இதழ் வெளிவந்தபோது, பிரமிள் அதில் நிறைய எழுதத் தொடங்கினார். குருஜியேஃப் கதையும் சீன, இலங்கை வாய்மொழிக் கதைகளும் இப்படி வெளிவந்தவைதாம். பின்னிரு சின்னஞ் சிறுகதைகளும் நேரடி மொழிபெயர்ப்பு அல்ல, ஞாபகத்திலிருந்து எழுதப்பட்டவை.

அரும்புவில் இரு இதழ்களில் வெளிவந்தது, கார்வரின் 'கதீட்ரல்' கதை. இதற்கு பிரமிளே சித்திரமும் வரைந்திருந்தார். அமெரிக்க நவீனச் சிறுகதை ஆசிரியர்களில் மிகவும் குறிப்பிடத்தக்கவர் கார்வர். அவரது கதை தமிழில் அதுவரை வேறொன்றும் வெளிவந்திருக்கவில்லை; 'கதீட்ரல்' கார்வரின் பிரதிநிதித்துவக் கதையாகும்.

அரும்புக்காக எழுதப்பட்ட 'பிரதிமானுடர்', பின்பு அவ்விதழுடன் ஏற்பட்ட மனச் சுணக்கம் காரணமாக வெளி வராமலே நின்றுபோனது. பிறகு, 'லயம்' பிரமிள் நினைவுமலரில் அதை நான் வெளியிட்டேன். ஓவியரான அவருக்கு, சிறுவயதிலிருந்தே காமிக்ஸ் என்னும் சித்திரக் கதை வடிவில் ஈடுபாடு இருந்து வந்திருக்கிறது. பள்ளி வயதில் 'யாழ்' கையெழுத்துப் பத்திரிகையிலேயே இவ்வகையில் முயன்று பார்த்திருக்கிறார். 'பாக்கு வெத்தலை' என்ற தலைப்பில் ஒரு ஒரிஜினலான சித்திரக் கதையைப் புனைந்து சில பக்கச் சித்திரங்களும் கதையுமாக வரைந்து கொண்டுபோய், அப்போதுதான் வெளிவரத் துவங்கியிருந்த பிரபல நடிகரின் பத்திரிகையில் பிரசுரிக்கும் வாய்ப்புக் கேட்டு ஒதுக்கப்பட்டதை, நான்கூட இருந்து அறிவேன். எனவே, அரும்புவில் சித்திரக்கதை வர ஆசிரியர் ஆசைப்பட்டபோது, மொழிமாற்றம்



மட்டும் செய்துதரத் தேர்ந்தெடுத்த கதைதான் 'பிளேடு ரன்னர்'. விஞ்ஞானக் கதைப்பட வரிசையில் மிகவும் முக்கியத்துவம் பெற்ற அதை 'ஏலியன்', 'கிளாடியேட்டர்' போன்ற புகழ்பெற்ற படங்களைப் பின்பு எடுத்த ரைட்லி ஸ்காட் இயக்கியிருந்தார்; ஹாரிஸன் போர்டு நடித்திருந்தார்.

பிரமிளின் புனைகதைகள் சம்பந்தமான எல்லாவற்றையும் ஒரு சேரத் தொகுத்துத் தரும் நோக்கில், அவருடைய நாடகக் கதைப் பிரதிகளும் தொலைக்காட்சி நாடகப் பிரதியும் தொடர்கதையும் பிறவும் ஒருசேரத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

அம்பையின் 'பயங்கள்' நாடகத்துக்குப் பின்பு எழுதப்பட்டது 'நக்ஷத்ரவாஸி' என்பது வாசகர்கள் கவனத்துக்குரியது. இந்நாடகம் இலங்கையிலும் லண்டனிலும் அரங்கேற்றப்பட்டுள்ளது - பாலேந்திரா குழுவினரால். ஆனால், தமிழ்நாட்டில் இதைத் தொடவே மறுக்கின்றனர். இது தமிழில் உள்ள சிறந்த நாடகப் பிரதிகளில் ஒன்று. இதற்கு உரிய அங்கீகாரத்தை தமிழ் இலக்கிய உலக அரசியல் மறுத்து வருகிறது. இரண்டு ஆண்டுகளுக்கு முன் வெளி ரெங்கராஜன் சென்னையில் இந்த நாடகத்தை இயக்கி நடத்தினார். எனினும், சரியான வெளிப்பாடும் ஏற்பும் இதற்கு இன்னமும் கிடைக்கவில்லை என்றே சொல்லலாம். இதில் கிரேக்க நாடகத்தின் கூறுகளும் இந்திய நாடகத்தின் கூறுகளும் கச்சிதமாக இணைந்து புதிய பிறவி எடுத்திருப்பதைக் காணலாம். ஆகாயத்தில் தோன்றும் நட்சத்திரமாகவும், பாதாள உலகில் நெளியும் பாம்பாகவும் இதன் பாத்திரங்கள் முரண்பாடு பெற்று விளங்குகின்றன. இது 'பாலம்' பத்திரிகையில் முதலில் வெளிவந்து பின்பு நூல் வடிவம் பெற்றது. அப்போது வேறு இரு சிறு பாவனை நாடகங்களும் நூலில் இடம்பெற்றன. சென்னையில் பிரமிளின் கவிதை ஒன்று நாடகமாக்கப் பட்டதாகவும், லண்டனில் 'அவைக்காற்றுக் கழகம்' இவருடைய கதையொன்றை நாடகமாக நடத்தி வருவதாகவும் தெரிகிறது. இலங்கைத் தமிழீழ அமைப்புக்காக, இயக்க நோக்கை வெளிப்படுத்தும் விதமாக எப்படியும் மாற்றி நடத்திக் கொள்ளும் வண்ணம் ஒரு நாடகம் அவர் எழுதியதாகவும் அது இலண்டன் போன்ற மேலை நாடுகளில் அரங்கேற்றப்பட்டதாகவும் அறிகிறேன். இது பற்றிய முழுமையான தகவல்கள் இல்லை.

'கருடனூர் ரிப்போர்ட்'டின் கதைக்கு கரு அவருடைய மனத்துக்கு உள்ளேயே கிடந்து, தொலைக்காட்சி நாடகமாகவும் தொடர்கதையாகவும் வெவ்வேறு பரிமாணங்களில் உருவெடுத்திருக்கிறது. தொலைக்காட்சி நாடகம் என்பது ஒரு தனிவகை. மேற்கு நாடுகளைப் போல் அதைத் தமிழில் சரியாகக் கையாள்வதில்லை. பெண்களும் குழந்தைகளும் அதிகம் பார்ப்பதற்கேற்ப பிரமிளின் இந்நாடகத்தில் குழந்தைகள் அதிகம் வருகின்றனர். மங்களமாக ஆரம்பிக்கிறது கதை. சிறுகதையில் வில்லனாக இருந்தவன் தொலைக்காட்சித் தொடரில் கதாநாயகனாக உருமாறுகிறான். ரேக்ளா வண்டி ரதமாகிறது.

விஷ்ணு நாகராஜன் இயக்கத்தில் தயாரிக்கவிருந்த தொடர் 'கருடனூர் ரிப்போர்ட்'. தொலைக்காட்சிக்குச் சமர்ப்பிக்கக் கேட்டதற்கு இணங்க உடனே எழுதிதரப்பட்டது இது. எனவே, பின்பகுதி விரிவு பெறாமல் சுருக்கமாகவே தரப்பட்டுள்ளது. தொலைக்காட்சியினர் ஏற்றுக்கொள்ளாததால், பிறகு பின்பகுதி எழுதப்படவேயில்லை. 'அரும்பு' இதழில் ஒரு தொடர்கதை எழுத வாய்ப்புக் கிடைத்தபோது, கிறிஸ்தவப் பத்திரிகையான அதில் 'கருடன்' போன்ற இந்துத் தொன்மங்களைக் கொண்டு வரவேண்டாமே என்று அதை ராஜாளி ஆக்கிவிட்டார் பிரமிள். அத்தொடர் கதைக்கான சித்திரங்களையும் அவரே வரைந்தார். கிராமீயத்தை ஒட்டிய ஃபான்டஸியாக அது வேறு ஒரு அற்புத வடிவம் கொண்டது. பின்பு 'அரும்பு' இதழுடன் கொண்ட மனச்சுணக்கம் காரணமாக அத்தொடரைக் கால்வாசிகூட வராத நிலையில் நிறுத்திவிட்டார். அப்படி முடிவுறாமல் நின்றுவிட்ட தொடர்கதை 'ராஜாளி மலை. தொடர்கதைக்கான சரியான லட்சணங்கள் அமைந்த ஜனரஞ்சமான கதை இது.

5

அறுபதுகளின் பிற்பகுதிகளிலும் எழுபதுகளின் முற்பகுதியிலும் பிரமிள் இரு ஆங்கில நாவல்களை முழுமையாக எழுதினார். பிரமிளுடனான இளமைக்கால இலங்கை நினைவுகளை 'மல்லிகை' பத்திரிகை புத்தாயிரமாவது ஆண்டு மலரில் எழுதியுள்ள ரத்ந சபாபதி அய்யர், திருக்கோணமலையில் அப்போது அவர் ஓர் ஆங்கில

நாவலை முழுமையாக எழுதிப் பிரசுரத்துக்கு முயன்று கொண்டிருந்ததாக தகவலைத் தந்திருக்கிறார். இலங்கையிலிருந்து இந்தியாவுக்கு வந்தபின் டில்லியில் வாழ்ந்தபோது, அவர் எழுதிய ஆங்கில நாவலை வெங்கட்சாமிநாதன் டைப் அடித்துத் தந்ததாகத் தெரிவித்துள்ளார் பிரமிள். ஆனால், இவையிரண்டும் பின்பு அவராலேயே அழிக்கப்பட்டுவிட்டன. திருத்தப்பட வேண்டும் அல்லது நிறைவுதராமை என்பன இதற்குக் காரணங்களாக இருக்கலாம். பிற்காலத்தில் அவர் ஆங்கிலத்தில் நாவல் எழுதமுயன்ற முயற்சிகளும் அப்படி அப்படியே நின்றுவிட்டன.

பிரமிள் மறைவுக்குப் பின் அவருடைய ஃபைல்களில் கிடைத்த சில கதைப் பகுதிகள், நாவல் கருக்கள் பற்றிய கடிதங்கள், புனைகதைகள் பற்றிய பிற தகவல்கள் கதைகள் அடங்கிய நூல் தொகுதியில் பின்னிணைப்புகளாகத் தரப்பட்டுள்ளன.

'பிரமிள் படைப்புகள்' - சிறுகதைகள், குறுநாவல்கள், நாடகங்கள் (2003) என்ற தொகுப்பை அடையாளம் பதிப்பகம் கொண்டுவந்தது. 'யாழ் கதைகள்' (2010) என்ற பெயரில் சிறுநூலாக பிரமிளின் ஆரம்பகாலக் கதைகள் 'லயம்' வெளியீடாக வந்தது. அம்ருதா பதிப்பகத்தின் 'முத்துக்கள் பத்து' நூல் வரிசையில் பிரமிளின் சிறந்த 10 சிறுகதைகள் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பிரசுரமாயின. இப்போது 'பிரமிள் படைப்புகள்' (2018) என்ற நூல் வரிசையில் இரண்டாவதாக அனைத்துக் கதைப் பிரதிகளும் அடங்கிய தொகுதி வெளிவந்துள்ளது. ●

கால. சுப்ரமணியம் <kasu.layam@gmail.com >

# ரவிசுப்பிரமணியன் கவிதைகள்



1. 23 மே 2018 - தூத்துக்குடி

வீடுகள்
தாழிடப்பட்டுக் கிடக்கின்றன.

பகலிலேயே
கடைகளெல்லாம் அடைக்கப்பட்டுவிட்டன.

வெறுமையாய் நீள்கின்றன
சாலைகள்.

போர் முடிந்து ஓய்ந்தது போலொரு அமைதியின் பீதி.

பறவைகளுமற்ற
இந்த நிசப்தம்
பயங்கரமானதாக இருக்கிறது.

முழு அமைதியிடையே
மனதைத் துளைக்கிறது
ரத்தக்கரை படியும் நாட்களின்
தோட்டாக்களது ஓலம்.

2. அன்பாக

சந்தித்தேன்
என்னோடு படித்தவளை
வருஷங்கள் பல கடந்து

வண்ணக்கனவுகளெனும்
தேன் மாந்தித் திரிந்த நாட்களில் அவளும் ஒரு தேவதை

பல்லாண்டான
தைல வண்ண செவ்வியல் ஓவியம் போல் நின்றவளிடம்
ஒரு சின்ன பரவசம் பரவ
யத்தனித்தேன் பேச

என்ன என்பது போல் முகக்குறிகாட்ட
என்னைத் தெரியலையா
பெயரைச் சொன்னேன்

சட்டென மகிழ்ச்சி தளும்ப
பேச ஆரம்பித்தாள்
என்ன இவ்ளோ குண்டாயிட்டிங்க
பாட்டெல்லாம் என்னாச்சு

வகுப்பறைகள் கோவில்கள்
வயல்வெளிகள் ஆற்றங்கரை திருவிழாக்களென
பதின்மத்தின் வீதிகளில் நடந்தோம்
சற்று நேரம்

எங்கிருந்தோ வந்த பேத்தி
புடவையைப் பிடித்திழுக்க
அவசரமாய் நகர்ந்தாள்
அலைபேசி எண்ணை வாங்கியபடி

என் கடந்தகால நினைவறை ஒன்றை
இழுத்துக்கொண்டு போகிறாள் அவள் பேத்தி ●

ரவிசுப்பிரமணியன் <ravisubramaniyan@gmail.com>

சிறுகதை

# போர்வை

அனோஜன் பாலகிருஷ்ணன்

1981-இல் அச்சாகிய 'ஈழநாடு' பத்திரிகையில் வெளியான இந்த துண்டுச்செய்தியை வாசிக்காமல் இக்கதைக்குள் செல்ல முடியாது என்பதால் இதை வாசித்தே ஆகவேண்டிய கட்டாயம்.

> யாழ்ப்பாணம் கல்வியங்காட்டில் செங்குந்தா இந்துக் கல்லூரியருகே தமிழ் புதிய புலிகளின் தலைவர் செட்டி சுட்டுக் கொல்லப்பட்டார். அவரருகே கழுத்திலிருந்த மட்டையில், 'தேச விடுதலைக்காகச் சேர்த்த பணத்தைக் கையாடல் செய்ததற்காகவும் சகதோழர்களை சிங்கள இனவாத அரசுக்கு காட்டிக்கொடுத்ததற்காவும் இந்த மரணதண்டனை வழங்கப்படுகிறது' என்று எழுதப்பட்டிருந்தது. வீதியில் அனாதரவாக வீசப்பட்ட அவரின் சடலம் கருப்புப் போர்வையால் மூடப்பட்டிருந்தது.

*1*

மேயர் அல்பேர்ட் துரையப்பா, 'முஸ்தபா' தையல்கடையில், மிகச் சாதாரணமாக தேநீர் ஆவிபறக்க தகர மூக்குப் பேணியுடன் அமர்ந்திருந்தார். தையல் இயந்திரத்திலிருந்து சடசடக்கும் ஒலி எழுந்து எழுந்து அமர்ந்து பரவிக் கொண்டிருந்தது. ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் அவர் இங்கே வருவது வழமை. யாழ்ப்பாண பட்டினத்தில் சனநெருக்கடி மிக்க பகுதிக்குள் அந்தத் தையல் கடை ஒதுக்குப்புறமாக அமைந்திருந்தது. யாழ்ப்பாண மேயர் துரையப்பாவை அந்தக் கடையில் அடிக்கடி காணமுடியும் என்பது மக்களுக்குத் தெரிந்தே இருந்தது. வீதியில் நடந்து செல்லும்போது வணக்கம் சொல்லும் அனைவர்க்கும் புன்னகைத்தவாறே வணக்கம் சொல்வது சளைக்காமல் நடைபெறும் ஒன்று.

இன்று அவர் கையோடு போர்வை ஒன்றை எடுத்து வந்திருந்தார். அதன் இருபுறத்தையும் தையலோடி இறுகத் தைக்க வேண்டியிருந்தது. எவ்வளவு வற்புறுத்தியும் முஸ்தபா தைத்ததற்கு கொடுத்த கூலியை வாங்க மறுத்தான். இருந்தாலும் பலவந்தமா "பிடியும் ஐசே" என்று காசை திணித்துவிட்டு, தன் வெள்ளை வேட்டி சட்டையை நீவிவிட்டுக்கொண்டு புறப்பட ஆயத்தமானர்.

அப்போதுதான் தம்பி அவர்கள் முன் மெல்லிய காற்றெனத் தோன்றினான். துரையப்பாவை நேர்கொண்ட பார்வையில் பார்த்துக்கொண்டே இடுப்பில் மறைத்துவைத்த கைத்துப்பாக்கியை எடுத்தான். துரையப்பா சுதாகரித்து தடுமாற முஸ்தப்பா குறுக்கே பாய்ந்தான். கணப்பொழுதில் முதலாவது குண்டு வெடித்தது. சனம் துப்பாக்கி வேட்டோசையினால் வெருண்டு அக்கம்பக்கம் சிதறி ஓடத்தொடங்கியது. துரையப்பா திகைத்து பின்வாங்கி கடைக்குள் நுழைய அவர் கையிலிருந்த போர்வையை ஏறக்குறையப் பறித்தவாறு யாரோ ஒருவன் ஓடத் தொடங்கினான். தோல்பட்டையில் இரத்தம் வடிய முஸ்தபா கடைக்குள் துரையப்பாவை தள்ளிக்கொண்டு புகுந்தான்.

தம்பி அந்தக் கனவை மீண்டும் மீண்டும் தனக்குள் ஓட்டிப் பார்த்தான். அவன் மீதே அவனுக்கு எரிச்சல் வந்தது. எத்தனைத் தடவையோ துரையப்பாவை கொல்லவேண்டும் என்பது அவனது வாழ்நாள் திட்டமாக இருந்தது. இன்றுதான் அவரைக் கொல்ல முயல்வது போல கனவுவந்தது. ஆனால், அது தோல்வியில் முடிந்தது என்பதை கிஞ் சித்தும் ஏற்றுக்கொள்ள இயலவில்லை. முஷ்டியை மடக்கி காற்றில் குத்தினான்.

*2*

வரும் மாதம் குடியரசு தினம் வருகிறது. ஒட்டுமொத்தமாகப் புறக்கணிக்க வேண்டும். கடல் காற்றின் இரைச்சலை மீறி மேடை உக்கிரம் கொண்டிருந்தது. பெற்றோமக்ஸின் வெளிச்சம் குழுமியிருந்த மக்களின் முகத்தில் பட்டுத்தெறித்தது.

தம்பியும் அவன் நண்பர்களும் இந்த விஷயத்தில் உறுதியாகத்தான் இருந்தார்கள். இப்போதுதான் அவர்களுக்கு பதினாறு வயது தாண்டியிருந்தது. மூன்று நாட்களுக்கு மேல் ஹர்த்தால் செய்யவேண்டும். ஒட்டுமொத்தமாகத் தமிழர்களின் எதிர்ப்புணர்வை சிங்கள அரசுக்குக் காட்டவேண்டும். எல்லோருக்கும் ஒருமித்த உணர்வுதான் இருந்ததாகத் தோன்றியது தம்பிக்கு. கூட்டத்திலிருந்து தம்பியும் நண்பர்களும் விலகி தனியாக பிரிந்து நடந்தார்கள். பனைமரத்தில் கட்டியிருந்த ஒலிபெருக்கி கருவிகள் உக்கிரமாக அலறியவாறிருந்தன.



நிலவு விரிந்த ஒளிகளைச் சிதறவிட்டிருக்கும் வல்வெட்டித்துறை கடற்கரையில், அரசப் பேருந்து ஒன்றை எரிப்பதாகத் தம்பியும் அவனின் இரண்டு நண்பர்களும் திட்டம் தீட்டியதைச் சங்குகளும் சிற்பிகளும் ஈரம்படிந்த மண்ணில் காதைச் சாய்ந்து

கேட்டுக்கொண்டிருந்தன.

நண்பர்கள் அனைவரும் சென்றுவிட ,தம்பி தனியே கடற்கரையை பார்த்துக்கொண்டு அமர்ந்திருந்தான். அலைகளின் மேலே நுரைகள் வெடித்து பொடிப்பொடியாகி உதிர்ந்து கொண்டிருந்தன. அப்படியே ஈர மண்ணில் தலையைச் சாய்த்து அண்ணார்ந்து வான் பார்த்துப் படுத்தான்.

இருட்டு அடர்த்தியில் வீழ்ந்து களைத்திருந்தது. மெல்லிய கீறலாக ஒளிபடர, அவள் விண்ணிலிருந்து விடுபட்ட பறவையின் இறக்கையின் அலைவில் கீழே மிதந்துவந்தாள். தம்பி அவளையே பார்த்தவாறிருந்தான். நெருங்க நெருங்க அவள் உருவம் ஜொலித்து பிரகாசமாகி துலக்கம் அடைந்தது. அவளின் ஒளியின் முன்னால் நட்சத்திரங்கள் சோகை இழந்து கரைந்தன. அலைகள் பாதத்தின் விளிம்பு வரை நுரைத்துக்கொண்டு எழுந்து வந்து தழுவிச் சென்றன. அப்போதுதான் அவளின் வருகை நிகழ்ந்துகொண்டிருந்தது. அவளின் கையில் ஒரு போர்வை இருந்ததைத் தம்பி கவனித்தான்.

தேவதையின் வருகை ஒன்றை இச்சமயம் அவன் எதிர்பார்க்கவில்லை. இளம் சூடு உடலில் படர எழுந்துகொள்ள முயற்சி செய்தும் முடியாமல் அச்சத்தின் எல்லையில் தடுமாறி சிதறிக் கொண்டிருந்தான்.

புன்னகை குமிழ அவனை உற்றுப்பார்த்து, கையிலிருந்த போர்வையை அவள் கொடுத்தாள். மறுப்பேதும் சொல்ல இயலாத தன்மையில் தன் இருகரம் நீட்டி தம்பி அதனை வாங்கினான். வெதுவெதுப்பில் போர்வை கையில் கசந்தது.

*3*

செட்டிக்கு சொந்தவூர் கல்வியங்காடுதான். தனபாலசிங்கம் என்பதுதான் அவர் பெயராக இருந்தாலும் செட்டி என்ற பெயரிலே அனைவருக்கும் தெரிந்தவராக இருந்தார். கொஞ்சம் தடித்த குரல்தான். கவர்ச்சியாக உரையாடக் கூடியவர். கருகரு முடி கருவேப்பிலை கொழுந்தை நினைவுபடுத்தும்.

செட்டியைக் கண்டபோது பெரும் திடுக்கிடலாகவே இருந்தது மகேஸ்வரனுக்கு. நல்ல வெளிச்சம் கூடியிருக்கும் பொழுதிலே அவரின் வீடு வந்து சுதந்திரமாகச் சந்தித்தார்.

“வந்தாச்சோ?”

“தப்பியாச்சு.”

“என்ன?”

“நானும் பத்மநாதன், சிவராசா, ரத்னகுமாராக தப்பீட்டம்.”

“எப்படி?”

“அதை பேந்து சொல்லுறன்; இப்ப எனக்கொரு உதவி தேவை.”

மகேஸ்வரன் தமிழீழ ஆதரவாளர்தான் என்றாலும் கொஞ்சம் பயந்த சுபாவம் உடையவர். இலங்கை சிங்கள அமைச்சர்களை வரவேற்று அழைத்துவந்த அருளம்பலத்தின் வலதுகையான குமாரகுலசிங்கத்தை இவர்கள்தான் தட்டினார்கள் என்ற செய்தியை நன்கறிந்தவர் மகேஸ்வரன். காவல்துறையால் கைதுசெய்யப்பட்டு அனுராதபுர சிறையில் தண்டனைக்காலத்தில் இருப்பவர்கள் எப்படி தப்பித்தார்கள்? எழுந்து திமிரும் கேள்விகளையும் பதற்றத்தையும் மறைத்து, “என்ன உதவி?” என்றார்.

“எனி தனிநாடு அமைக்க முற்றுமுழுதாக போராடுவதாக இருக்கிறோம். அரச படைகளுடன் சண்டை பிடிக்க ஆயுதங்கள் தேவை. அதற்கு காசு நிறைய வேணும்... நீர்தான் ஏற்பாடு செய்யோணும்.”

வில்லங்கமான விசயமாகப்பட்டது. மகேஸ்வரன் வல்வெட்டித்துறையில் பிரபலமான கடத்தல்காரர்தான். குட்டிமணி, தங்கதுரை அளவுக்குப் பிரபலம் இல்லை எனினும் சளைக்காமல் தூத்துக்குடிக்கு வள்ளம்விட்டு சீலை,தங்கம் என்று பெரிய கை பார்த்துக் கொண்டிருந்தவர். சமாளிக்க எண்ணம் மனதில் எழுந்தது.

“செட்டி உமட நோக்கம் நல்ல நோக்கம்தான். ஆனாப்பாரும் இப்ப நிலைமை சரியில்லை.”

செட்டியின் முகம் இருண்டு வந்தது. அதைக் கவனிக்கத் தவறாத மகேஸ்வரன் இன்னும் குரலை சரிப்படுத்தி நீண்ட நேரம் கதைத்தார்.

**செட்டி கிரிமினல். கொள்ளைக்காரன். ஏகப்பட்ட வழக்குகள் அவனிடம் இருக்கு. சின்ன வயசிலே சீர்சிருத்தப் பள்ளிக்குப் போய் வந்தவன். அவனுக்கு தேசவிடுதலை எல்லாம் ஒரு பொருட்டே இல்லை.**

“இப்ப உமக்கு ஏற்ற ஆக்களை நான் சொல்லுறன், அவையளோட போய் நில்லும்.”

“ஆர்?”

“தம்பியோடையும் அவன்ர கூட்டாளியளோடையும்.”

“தம்பியா, ஆர் அவன்?”

*4*

தம்பியும் அவன் கூட்டாளிகளும் மூன்று நாள் சாப்பாடு இல்லாமல் மறைவாக அலைந்தார்கள். மரவள்ளிக்கிழங்குதான் தோட்டத்தில் பிடுங்க முடிந்தது. கிடைத்த கிழங்குகளை காற்சட்டை பொக்கற்றில் அடைத்து பசிக்கும்போது சருகுகளைக் குமித்து சுட்டுச் சாப்பிட்டார்கள். சேர்ந்து இயங்குவது அபாயமானது. பிரிந்து திரிவோம் என்று முடிவெடுத்த போது சில்வண்டுகள் ரீங்காரமிட்டுக் கொண்டிருந்தன.

தம்பி வந்து சேர்ந்த போது குட்டிமணியும் தங்கதுரையும் ஒன்றாகவே இருந்தார்கள். ஒருசேர புன்னகை உதட்டில் வெடித்தது.

“அடேய்..” என்றார் தங்கதுரை. அவரின் கேசம்

உப்புக்காற்றில் அலைந்தது. இடக்கையால் கோதி அமைதிப்படுத்தினார். தம்பி அவர் அருகில் வந்து, "தேடுகிறார்கள்" என்றான்.

"கேள்விப்பட்டோம், மிச்சாட்கள் எங்க?"

"கலைஞ்சிட்டம், நான் மட்டும் இங்கே வந்திட்டன்."

"அதுவும் நல்லதுதான், இப்போதைக்கு ராமேஸ்வரம் போய் கொஞ்ச நாள் இரு."

"நாளண்டைக்கு வள்ளம் ஒண்டு போகுது, போறியா?" இதுவரை அமைதியாவிருந்த குட்டிமணி செம்பிலிருந்த தண்ணீரைக் குடித்துவிட்டு மீதித் தண்ணீரில் கொப்பளித்துக்கொண்டு கேட்டார். கொப்பளித்த தண்ணீர் மண்ணில் சட்டென்று ஊறிச் சென்றது.

தம்பி யோசிக்காமல் "சரி" என்றான்.

"சாப்பிட்டியா?"

"இல்லை."

"சரி வா சாப்பிடுவம்."

பாயில் மூவரும் அமர்ந்தார்கள். இறால் குழம்பு சட்டியில் இருந்தது. சுடச்சுட புட்டும் கனவாய்க் கறியும் வந்தது. கோப்பையில் செறிவாகக் கொட்டி சாப்பிடத் தொடங்கினார்கள். தம்பி எதுவும் பேசவில்லை. நிச்சயம் அற்ற தனிமை அவர்களிடம் ஊறியிருந்தது.

"எப்படி பிழைச்சது?"

"பஸ்ஸை மறிச்சுட்டோம். எல்லோரையும் இறக்கிவிட்டுவிட்டு நடு வீதியில் வைத்துத்தான் கொளுத்தினம்... விக்." சொல்லிக்கொண்டிருக்கும்போதே தம்பிக்கு விக்கியது.செம்பிலிருந்த தண்ணீரை தங்கதுரை எடுத்துக்கொடுத்தார். இரண்டு மிடக்கு குடித்துவிட்டு, "அதற்குள்ள பொலிஸ் வந்திட்டு. என்னோட நிண்டவர்கள் ஓட வெளிக்கட்டாங்க, நானும் பாஞ் சுட்டேன்."

"அப்ப கொளுத்தேல்ல?"

"ஹும்."

திருப்தியாகச் சாப்பிட்டு முடித்தபின், "அண்ணை இன்னும் எவ்வளவு காலம்தான் இந்தக் கடத்தல்? நாங்கள் முழு உக்கிரமாக எங்கட எதிர்ப்பைச் சிங்கள அரசுக்கு காட்டவேணுமல்லோ" என்றான் தம்பி.

"மேயர் என்னவாம்?" தங்கதுரை அதைப் பொருட்படுத்தாது கேட்க, விழிகள் மிளிர்ந்து கூர்மையடைய தம்பி அவரைப் பார்த்து, "சீக்கிரம் துரையப்பாவை அனுப்போணும்" என்றான்.

மிளிர்ந்த கண்கள் சரிய அவனில் களைப்பையும் நித்திரைக்கான ஏக்கத்தையும் கவனித்த தங்கதுரை, தம்பி படுப்பதற்குத் தேவையான ஆயத்தங்களைச் செய்யலானார். ஓலைப்பாயை இழுத்து தரையில் விரித்து தலையணி ஒன்றையும் எடுத்துப்போட்டார்.

"நுளம்பு வரும்; இந்தா போர்வை" என்று

**உங்கட போராட்டம், மாணவர் பேரவையில் உங்கள் பங்களிப்பு எல்லாம் நல்லாய் தெரியும். தமிரசுக்கட்சி உங்களை நல்லாய் பயன்படுத்துது. நீங்க காட்டுற வேகம் அவர்களிடம் இல்லை...**

கம்பளிப்போர்வை ஒன்றைத் தூக்கி தம்பியின் கைகளில் எறிந்தார். நல்ல தடித்த போர்வை. இரண்டு பக்க கரையும் மடிக்கப்பட்டு அழுத்தமாகத் தைக்கப்பட்டிருந்தது.

மூன்றாம்நாள் வல்வெட்டித்துறையிலிருந்து புறப்பட்ட படகில் தம்பியும் குட்டிமணியும், கடத்தல் பொருட்களுடன் இருந்தார்கள். அலைகளை உந்தித் தள்ளிக்கொண்டு படகு வேக வேகமாக ராமேஸ்வரத்தை நோக்கி முன்னேறிப் பாய்ந்தது.

*5*

செட்டி, ராகவனையும் கணேஷ் ஐயரையும் சந்தித்தது இருள் கவியும் ஒரு மாலை வேளையில். மூடிய வீடு என்றாலும் ஹரிக்கன் மண்ணெண்ணெய் லாம்புகள் ஒளிர்ந்து மாறும் முகபாவனையனைத்தையும் ஆளாளுக்கு தெளிவாகக் காட்டியவாறிருந்தன. செட்டியுடன் தப்பித்து வந்த ரத்னகுமாரும் உடனிருந்தார்.

"எங்களைப் பற்றி ஆர் சொன்னது?"

"அதுபெரிய கதை; உங்களைப் பற்றித் தானே ஊரே கதைக்குது."

"என்ன கதைக்குது?" ராகவன் மோவாயை தடவிக்கொண்டு கேட்டார்.

செட்டி ஒருகணம் மௌனமாகிவிட்டு, "சரி சொல்கிறேன், ஜீவராஜவுக்கு அடைக்கலம் கொடுத்தது நீங்களும் குலமும் தானே?"

அந்தப் பதில் கணேஷ் ஐயரையும் ராகவனையும் மௌனப்படுத்தியது. இது எப்படி வெளியே கசிந்தது என்ற சிந்தனை துளிர்விட ஆழமாக ஓர் இடத்தில் பயமும் அலைபாய்ந்தது. வட்டுக்கோட்டையில் எம்பியாகவிருந்த தியாகராஜா கடுமையான அரச ஆதரவாளராக இருந்தார். அவரை கொலைசெய்ய முயன்று தோல்வியடைந்து தேடப்படும் நபராக ஜீவராஜா இருந்தார். புன்னாலைக் கட்டுவனில் வைத்து தலைமறைவாக வாழ கணேஷ் ஐயரும், குலமும் கொஞ்சக்காலம் ஜீவராஜாவுக்கு உதவி புரிந்திருந்தார்கள்.

"உங்கட போராட்டம், மாணவர் பேரவையில் உங்கள் பங்களிப்பு எல்லாம் நல்லாய் தெரியும். தமிரசுக்கட்சி உங்களை நல்லாய் பயன்படுத்துது. நீங்க காட்டுற வேகம் அவர்களிடம் இல்லை..." செட்டி சொல்லிமுடிக்க ராகவனும் கணேஷ் ஐயரும் சந்தேகம் எழுந்து அலைந்து வடியும் கண்களை அசைத்தவாறு என்ன பதில் சொல்வதென்று யோசித்தனர். ஏற்கனவே அந்த விசனம் அவர்களிடம் பரவியிருந்தது.

"நாங்க தனியாக நின்று வேலை செய்யோணும், தமிழரசுக் கட்சியை நம்பிப் பிரயோசனம் இல்லை. ஆயுதப் போராட்டத்தை தொடங்க வேணும்." செட்டி படபடவென்று சொல்லிக்கொண்டு சென்றார். ரத்தினகுமாரன் மௌனமாகவே அவருடன் இருந்தார். நாழிகைகள் வீழ்ந்து கரைந்தவாறிருந்தன.

"சரி சாப்பிடுவோம்." ராகவன் அதற்கு தயாராகினார்.

வெள்ளைப்புட்டும் முருங்கக்காய் குழம்பும் வந்தது. பிசைந்து சாப்பிடும் போதும் கதைத்தார்கள். "ஆயுதங்கள் எடுக்கலாம், பயிற்சி எடுக்க இடமும் பார்க்கலாம். அதற்கு எல்லாத்துக்கும் காசு வேணும்." செட்டி தொடர்ந்தார்.

"அதுக்கு என்ன செய்யலாம் எண்டுறியல்?"

"கொள்ளையடிக்கோணும்."

"கொள்ளையா எங்க?" திடுக்கிட்ட குரலாக ஒலித்தது.

"தெல்லிப்பழை கூட்டுறவு சங்கம்." இதுவரை மௌனமாகவிருந்த ரத்தினகுமார் இப்போது வாய் திறந்தார்.

"இப்ப நாங்க உங்களுக்கு என்ன செய்ய வேணும்?"

"கொஞ்ச நாள் தங்க இடம் வேணும்."

கணேஷ் ஐயரும் ராகவனும் சிறிய யோசனைக்குப்பின் சம்மதித்தனர்.

"தம்பிய உங்களுக்குத் தெரியுமா?" செட்டி சாரத்தை இறக்கி இழுத்துக் கட்டிக்கொண்டு அவர்களிடம் அதைக் கேட்டார்.

"தம்பியா; யார்ட தம்பிய?"

"பஸ் எரிக்கப்போய் பிரச்சினை பட்டாங்களே வல்வெட்டித்துறை பொடியல், அந்த செட்டை தெரியுமா?"

உதட்டை பிதுக்கி இல்லை என்றார்கள்.

"துணிச்சல்காரப் பொடியல், அவங்களோடையும் கதைக்கோணும்."

"சரி நாளைக்கு காலை கதைப்பம். எனக்கு விடிய அஞ்சு மணிக்கு கோயில பூசை இருக்கு, நான் போகோணும்; இப்ப படுப்பம்" என்று கணேஷ் ஐயர் படுக்க தயாராக எல்லோரும் உறங்கச் சென்றார்கள். இருள் முற்றாகக் கவிந்து மூடியிருந்தது.

*6*

தங்கதுரை இளனியை சீவிக்கொண்டிருந்த போது தம்பி பக்கத்திலே தீவிர யோசனையுடன் இருந்தான். மீன் வலைகள் வெயிலில் காயப்போட்டிருந்தார்கள். கொக்குகள் தங்கள் வெளிர்நிற இறக்கைகள் திறந்து மூடியவாறு வலைமேல் நடந்து இரை கிடைக்குமா என்ற ஏக்கத்துடன் நீண்ட அலகுகளால் தேடியாவறிருந்தன. வெயில் இன்னும்இன்னும் செறிவடைந்துகொண்டே சென்றது. நடைச்சத்தம் கேட்டு இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். செட்டியும் மேலும் இருவரும் அவர்களை நோக்கி நடந்து வந்துகொண்டிருந்தார்கள்.

வெட்டிய இளனியை தம்பிக்கு கொடுத்துக்கொண்டு செட்டியை தங்கதுரை பார்த்தார். செட்டியிடமிருந்து சிநேகமான புன்னகை ஒன்று ஒளிர்ந்தது.

"என்ன செட்டி இந்தப் பக்கம்?"

"எல்லாருக்கும் அடைக்கலம் இப்ப இந்தியாதானேஞ் ஹஹா. உங்களைத் தேடித்தான் இதுக்கால வந்தோம். தெல்லிப்பழை கூட்டுறவு சங்கதில் கொள்ளையடிச்சுட்டோம்."

"உண்மையாகவா?" தங்கதுரையின் குரலில் நிஜமாகவே ஆச்சரியம் இருந்ததை தம்பி கவனித்தான்.

"97 ஆயிரம் ரூபாய் தேறிச்சு. ஆயுதம் வாங்கப்போறம். எனிமேல் சண்டை தான்." உற்சாகமான வார்த்தையில் செட்டி சொல்ல, தம்பியின் கண்கள் செட்டியின் கண்களைச் சந்தித்துக் கலந்தது. அந்தளவு காசு அப்ப தமிழரசுக் கட்சிக்கு கூட இருந்திருக்குமோ தெரியாது. பெரும் பணம் செட்டியின் வித்தையில் சிக்கியிருந்தது.

"நீதான் தம்பியா?" செட்டி அவனைப் பார்த்துக் கேட்டார். தம்பி தலையை அசைத்தான்.

"என்னப்பா என்னை வெருண்டு பார்க்கிறீர், உம்மைப் பற்றி கேள்விப்பட்டு இருக்கிறேன். நல்ல தைரியமான பொடியனாமே நீர், கொப்பற்ற பேரென்ன?"

"வேலுப்பிள்ளை."

அவர்களுக்கு இடையிலான சந்திப்பு இப்படிதான் ஆரம்பமாகியது. தங்கதுரைக்கு அது பிடிப்பில்லாமல் இருந்தது. அடிக்கடி தம்பியும் செட்டியும் சந்திப்பதை ஆட்சேபிக்கத் தொடங்கினார்.

"செட்டி கிரிமினல். கொள்ளைக்காரன். ஏகப்பட்ட வழக்குகள் அவனிடம் இருக்கு. சின்ன வயசிலே சீர்திருத்தப் பள்ளிக்குப் போய் வந்தவன். அவனுக்கு தேசவிடுதலை எல்லாம் ஒரு பொருட்டே இல்லை. தன்னை காக்க இதை இப்ப போர்வையாக அணித்து கொள்றான் அவனோட சேராத.."

நீங்களும் கடத்தல்தானே செய்றியல் என்ற கேள்வி தம்பியின் தொண்டைவரை வர அவசரமாக விழுங்கினான். "அண்ணை, நீங்கள் கடத்தல் செய்தாலும் உங்களிட்ட இருக்கிற தேசவிடுதலை உணர்வு பற்றி எனக்கு நல்லாய் தெரியும். ஆனா உங்களை வெறும் கடத்தல்காரனாகத்தான் எல்லாரும் பாக்கினம். செட்டியில குறைபாடுகள் இருக்கலாம். ஆனா கெட்டிக்காரர் அவருடைய திறமையை இங்கால திருப்பிவிட்டா சரி."

"மயிர திருப்புவாய், அவன் ஒட்டுண்ணி, அவனால் அழிவுதான் எஞ்சும்." கடுமையாகவே தங்கதுரை அவனின் விழிகளை ஊடுருவி பார்த்துச் சொன்னார்.

ஆனால், தம்பிக்கு செட்டியின் பேச்சு மீது அதீத ஈர்ப்பு கிளைவிட்டுப் படர்ந்தது. தொடர்ந்து கடத்தலை செய்துகொண்டு அப்ப அப்ப எதிர்ப்புகளை

அரசாங்கத்துக்கு காட்டுவதில் தம்பிக்கு விரும்பம் இல்லை. தங்கதுரையின் பேச்சை மீறி செட்டியிடம் விரும்பிப் பழக விரும்பிக்கொண்டே இருந்தான். அவர்கள் கோடம்பாக்கத்தில் மூடிய அறையில் சந்தித்து அதிக நேரம் பேசினார்கள்.

*7*

நல்ல மத்தியானப் பொழுதில் செட்டியும் தம்பியுமாக மீண்டும் வள்ளத்தில் வந்து வல்வெட்டித்துறையில் இறங்கினார்கள். தண்ணீர் விடாய்த்துக்கொண்டே இருந்தது. கைவசம் தண்ணீர் போர்த்தல் இருக்கவில்லை. குடிசைக்கு வந்தவுடன் தம்பி தண்ணீரை வாளிக்கால் அள்ளி அள்ளிக் குடித்தான். அதைப்பார்த்துக் கொண்டு செட்டி சொன்னார், “உன் தாகம் பெரிய தாகமாக மாறவேண்டும்.”

தம்பி நிமிர்ந்து அவரைப் பார்த்தான். இருவருக்கும் அதன் அர்த்தம் புரிந்தது. கண்களால் சைகை செய்தார்கள்.

“நமது அடுத்த திட்டம் துரையப்பாவை தட்டுறதுதான்.” செட்டி சொல்லிக் கொண்டிருந்தார்.

**அல்பேர்ட் துரையப்பா சுட்டுக்கொல்லப்பட்டார் என்கிற செய்தி நாடு முழுவதும் பரவியபோது தம்பி,கிருபாகரன், கலாவதி, நற்குணராஜா மூவரும் செட்டியுடன் இருந்தனர்.**

“திட்டம் வகுக்கவேணும்.”

“அல்பிரட் துரையப்பாவை தட்டினால் பெரிய மாற்றம் உண்டாகும். சிங்கள அரசுக்கு ஒத்து ஊதுவது அவன்தான். துரோகிகளைச் சாய்க்கோணும்.” செட்டியின் பேச்சு சீரான அம்பாகப் பாய்ந்து கொண்டேயிருந்தது. “நான் பிஸ்டல் எடுத்துத் தருகிறேன், உனக்கு நம்பிக்கையான பொடியலை வைத்துக்கொள்.”

அந்தக் காலத்தில் துருப்பிடித்த துப்பாகிகள்தான் கிடைப்பது சுலபம்தான். சுட்டால் எந்தப் பக்கம் சுடும் எனத் தெரியாது. குறி பார்த்து சுடுவது விசர் வேலை. குத்து மதிப்பில் சுட வேண்டியதுதான். மேயர் தரவளி முக்கிய புள்ளிகளை போடுவதானால் துப்பாக்கியின் குறியை அதிஷ்ட தேவதையிடம் விட முடியாது என செட்டிக்கு தெரியும்.

தங்கதுரையும் குட்டிமணியும் தம்பியை அடிக்கடி தொடர்புகொள்ள முயன்றாலும், அவனைப் பிடிப்பது கடினமாகவே இருந்தது. கிருபாகரன், கலாவதி, நற்குணராஜா என்ற மூன்று பேரோட தம்பி சுற்றித் திரிவதாகக் கேள்விப்பட்டார்கள். செட்டியுடன் தம்பி இருப்பது அவர்களுக்குக் கவலையே தந்துகொண்டிருந்தது.

*8*

பொன்னாலை வரதராஜ பெருமாள் கோயிலுக்கு மொரிஸ்மைனர் காரில் அல்பேர்ட் துரையப்பா வந்து சேர்ந்தார். மிக அமைதியாக இருந்தது சூழல். கைகளை மடக்கிவிரித்துச் சோம்பலை விரட்டினார். கோயில் வாசலில் இருந்து மணிச்சத்தம் கேட்க ஆரம்பித்திருந்தது. சிலிப்பரை காருக்குள் கழட்டிவிட்டுவிட்டு இறங்கினார். நிலம் குளிர்ந்தது.

“வணக்கம் ஐயா” என்ற குரல் அவரை நோக்கி மெதுமெதுப்பான பாம்பென சலனம் இல்லாமல் வந்தது. மூன்று யுவன்கள் நின்றிருந்தனர். புன்னகை படர வணக்கம் என்று சொல்லிய ஒரு கணப்பொழுதில் அவரை நோக்கி முதலாவது துப்பாக்கி குண்டு வந்தது. அடுத்த கணத்தில் அடுத்த குண்டு வந்தது. சுதாகரிக்க முதல் வீரிட்டு அலறிக்கொண்டு நிலத்தில் சாய்ந்து வீழ்ந்தார் துரையப்பா. குருதி கொப்பளித்துக்கொண்டு பாயத்தொடங்கியது.

மொரிஸ் மைனர் டிரைவர் பதறி அடித்து கதவை திறக்க அவரை இழுத்து தள்ளியது ஒரு உருவம். சில கணத்தில் சுட்டவர்களைத் தாங்கியபடி மொரிஸ் மைனர் வேகமாக எதிர் திசையில் சீறிப் பறந்து கொண்டிருந்தது.

அல்பேர்ட் துரையப்பா சுட்டுக்கொல்லப்பட்டார் என்கிற செய்தி நாடு முழுவதும் பரவியபோது தம்பி,கிருபாகரன், கலாவதி, நற்குணராஜா மூவரும் செட்டியுடன் இருந்தனர்.

“வலு திறமான வேலை.” செட்டி உற்சாகத்தில் மிதந்து தத்தளித்துக் கொண்டிருந்தார். நேரம் நடுயிரவு பன்னிரண்டைத் தாண்டி அதிகாலை ஒன்றை எட்டிப்பிடிக்க விரைந்துகொண்டிருந்தது. தம்பி பாயில் படுத்து அப்படியே நித்திரையாகிப் போனான். செட்டி அருகிலிருந்த போர்வையை எடுத்து தம்பி மீது போர்த்துவிட்டார். அவன் கை போர்வையை அனிச்சையாக அழுத்திப் பற்றிக்கொண்டது.

மெல்லிய ஒளிக் கீறல். கொஞ்சம் செல்லச்செல்ல அந்த ஒளி பிரகாசமாகி ஒரு பெண் எனத் தோன்றியது. அவள் வானிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்தாள். அவள் முகம் அழுதுவடிந்து உக்கிரமாக இருந்தது. திடுக்கிட்டு அவளை நிமிர்ந்து பார்த்தான் தம்பி. அவளின் கை நீண்டு அவனின் முன்பே வந்தது. “என் போர்வையை திருப்பித்தா” என்றாள் கோவம் தெறிக்க. தன்னில் சுற்றியிருந்த போர்வையை அவசரமாக அவிழ்த்துப் பிடுங்கி அவளிடம் நீட்டினான். போர்வை ஈரத்தால் பிசுபிசுத்தது. தொட்டுப் பார்க்கச் சிவந்த நிறத்தில் கையில் ஏதோ ஒட்ட கையை உதறி சுதாகரித்துப் பார்க்க இரத்தம் என்று புரிந்தது. தேகம் புல்லரித்து கையை உதறி திடுக்கிட்டுப் பார்க்க, தேவதையின் முகம் விகாரமாகிச் சென்றது.

“நீயே வைத்துக்கொள்.. நீயே வைத்துக்கொள்” என்று அலறிக்கொண்டே அவள் ராச்சத அன்னம் என சுழன்று தத்தளித்துப் பறந்தாள். தம்பி அவளையே வெறித்துப் பார்த்தவாறிருந்துவிட்டு பெருமூச்சுவிட்டு நிலத்தில் கையைக் குத்தினான். கையிலிருந்த இரத்தம் மண் முழுவதும் அப்பியது. ●

அனோஜன் பாலகிருஷ்ணன் <annogen03@gmail.com>

எதிர்வினை

# பாரதி விஜயம்
# மறுப்பா அல்லது வெறுப்பா?

கடற்கரய் மத்தவிலாச அங்கதம்

இந்த ஆண்டு பாரதி மறைவுக்கு பின் நிகழ்ந்த சர்ச்சைகள் குறித்து ஒரு நூல் எழுதுவதாக திட்டம் வைத்திருந்தேன். ஆனால், கடந்தாண்டு வெளியான எனது 'பாரதி விஜயம்' நூல் பற்றிய சர்ச்சைக்கு தனியே ஒரு கட்டுரை எழுத வேண்டியிருக்கும் என நினைக்கவில்லை. காலம் நமக்கு ஏற்படுத்தி தரும் கைமாறாக இதைக்கொள்கிறேன்.

கடந்த ஜூன் 2018 'அம்ருதா' இதழில் 'சட்டகப் பார்வை' பகுதியில் அ. ராமசாமி என் 'பாரதி விஜயம்'குறித்து 'கோணல்' பார்வையில் பல அவதூறுகளை கூறியிருந்தார். 'இந்நூலை நூலகத்தில் வாங்கி வைப்பதன் மூலம் ஆய்வாளர்கள் மேற்கோள் காட்டிவிடும் ஆபத்து இருப்பதால் நூலகத்தில் வாங்கி வைக்க வேண்டாம் என்று பரிந்துரைக்கிறேன். அந்தத் தகவலை ஆய்வு நூலகங்களுக்குக் கடிதம் மூலம் ஒரு தகவலாகத் தெரிவிக்க வேண்டும் என்று பரிந்துரை செய்கிறேன்' என்று ஓர் அரசாணையை வெளியிட்டிருக்கிறார். அதற்கான அதிகாரம் அ. ராமசாமிக்கு இருப்பதை நினைத்து அச்சம் ஏற்படுகிறது. ஜனநாயக சக்திகள் மீது நிகழ்த்தப்பட்ட அச்சுறுத்தலாகவே அந்த வரிகள் இருந்தன.

அ. ராமசாமி, பாரதி ஆய்வில் பல்கலைக்கழகங்கள் செய்த அநீதிகள் எதுவும் தெரியாமல் பேசுகிறார். தஞ்சைப் பல்கலைக்கழகம் பாரதி படைப்புகளை செம்பதிப்பாக வெளியிடுவதற்காக குழு அமைத்தது. அதில் பாரதியியலில் கைதேர்ந்த பெரியவர் சீனி.விசுவநாதனையும் இணைத்துக்கொண்டது. அவரும் பாரதியின் பணி என உடல், பொருள், ஆவியை கரைத்து வேலை செய்தார். இறுதியில் அவரை கழற்றிவிட்டுவிட்டு வரலாற்றுச் 'சிறப்பான' பதிப்பை பேராசிரியர் ம.ரா.போ. குருசாமி கொண்டு வந்தார். அதில் மண்டிய களைகளை எல்லாம் சீனி. விசுவநாதனே நிறைய பேசியிருக்கிறார். பல்வேறு கடிதப்போருக்குப் பிறகு சீனி.விசுவநாதன் பணிக்கு சன்மானம் தர சம்மதித்தது பல்கலைக்கழகம். ஆயிரக்கணக்கில் சம்பளம் பெற்றுக்கொண்டு வேலை செய்யும் பேராசிரியர் பெருமக்கள், சீனி.விசுவநாதன் பணிக்கு நல்கிய சன்மானம் பக்கத்திற்கு 2 ரூபாய். இவ்வளவு பாவங்களை சம்பாதித்துக் கொண்டுள்ள பல்கலைக்கழக லட்சணங்கள் எதுவும் தெரியாமல் பல்கலைக்கழகப் புனிதம் பேசுகிறார் அ. ராமசாமி. இதை நான் சொல்லவில்லை. 'காந்திமதி'க்கு ஏப்ரல் 2003இல் பெரியவர் சீனி.விசுவநாதனே வழங்கியுள்ள நேர்காணல் கூறுகிறது.



ஒருநூல் குறித்து சர்ச்சை எழுகிறது; அதன் உண்மையை அறிய அ. ராமசாமி என்ன செய்திருக்க வேண்டும்? இருதரப்பையும் கலந்து பேசியிருக்க வேண்டும். சீனி. விசுவநாதன் வெளியிட்டுள்ள துண்டறிக்கையிலேயே எனது இலக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. சீனி. விசுவநாதனுக்குத் தெரிந்த பண்புகூட அ. ராமசாமிக்குத் தெரியவில்லை. அதைவிட்டுவிட்டு 'மிரட்டும் ஆங்கிலத்தில்' வழக்கறிஞர் கடிதம் ஒன்றை அனுப்பி இருக்கிறார்கள் என கண்ணீர் வடிக்கிறார். நாங்கள் 'மிரட்டும்' ஆங்கிலத்தில் அனுப்பிய கடிதத்தை சீனி.விசுவநாதன் 'மென்மையான தமிழ்ச் சொற்களால் மொழிபெயர்த்து தந்திருக்கிறாராம்'. ஆங்கிலத்தில் மிரட்டும் கடித்தை தமிழில் மென்மையாக மொழிபெயர்க்க முடியும் என்ற புதிய உண்மையை உலகிற்கு அறிவித்திருக்கிறார் தமிழ்ப் பேராசிரியர் அ. ராமசாமி. அதிலிருந்தே இவரது நடுநிலைத் தன்மையை புரிந்துகொள்ள முடியும்.

வழக்கறிஞர் மூலம் கடிதம் அனுப்புவது மிரட்டுவதற்கல்ல; அநியாயமாக ஒருவரை நசுக்க நினைக்கும் அதிகார பலத்திற்கு எதிராக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கை. நான் நேர்மையோடு செயல்பட்டிருக்கிறேன் என்பதைப் புரிய வைப்பதற்கான முயற்சி. எங்கள் சார்பாக வழக்கறிஞர் கடிதத்தை அனுப்பி வைத்தவர் வெறும் வழக்கறிஞரல்ல; இலக்கிய உலகில் குயுக்திகளை, உள்ளடி அரசியல்களைப் புரிந்துகொள்ளக்கூடிய ஒரு மூத்தப் படைப்பாளி. அவரைவிட இந்தப் புகாரை புரிந்துகொள்ளும் ஆற்றல் உள்ள வழக்கறிஞர்கள் குறைவு. பாரதி மீதும், தமிழுலகம் மீதும் வழுவாத நம்பிக்கைக் கொண்டவர். சுருங்கச் சொன்னால் கூர்மதியாளர். வக்கீல் பீசுக்காக நோட்டீஸ் அனுப்பும் சராசரியல்ல அவர். என் தரப்பை உணர்ந்து, அதன் நியாயங்களை அறிந்த பின்பே அவர் இசைந்து நோட்டீஸ் அனுப்பியிருந்தார். அந்த நோட்டீசில் விளக்கப்பட்டுள்ள ஒரே ஷரத்து, 'சீனி.விசுவநாதனின் பொதுப்படையான குற்றச்சாட்டுகளை பொருத்தவரையில் 'பாரதி விஜயம்' புத்தகத்தில் எந்தவிதமான காப்புரிமை மீறல்களும் இல்லை' என்பதே. 'மேற்கோளாகக் காட்டப்படும் வரிகள் எவ்வித காப்புரிமை சட்டத்தின் கீழும் வராது' என மிகத் தெளிவுபட கூறியுள்ளார். இதிலிருந்தே எங்கள் நேர்மை அ.ராமசாமிக்கு உறைக்க வேண்டாமா?





பாரதி விஜயம்

மகாகவியுடன் கூடி வாழ்ந்தவர்களின் குறிப்புகள்

பதிப்பாசிரியர்

கடற்கரய் மத்தவிலாச அங்கதம்

சீனி.விசுவநாதனின் சர்ச்சைக்கு வருவோம். அவர் பதிப்பகத்தாருக்கு அனுப்பியிருந்த கடிதம் ‘பதிப்பாசிரியர் மன்னிக்கவே முடியாத பெருங் குற்றத்தைச் செய்துள்ளார்’ என்றது. மேலும், ‘50 ஆண்டுகால உழைப்பை தானே கண்டறிந்ததுபோல் பயன்படுத்தி உள்ளதைப் பார்த்து அதிர்ச்சியும் வேதனையும் அடைந்தேன்’ என்றது.‘கையாடிவிட்டார்’, ‘சான்றுகளை, ஆதாரங்களை சமர்ப்பிக்க வேண்டும்’ என அநேகக் கட்டளைகள் அதில் நிரம்பி வழிந்தன.

ஆகவே, சட்டத்தின் துணையை கோர முடிவெடுத்தேன். ஆனால், அவர் சட்ட ஆலோசனைகளை எல்லாம் மேற்கொண்டுவிட்டு, இனி கதைக்கு உதவாது என்பதால் தெருச்சண்டைக்கு அழைப்பு விடுத்தார். அதன் சாட்சியம்தான் ‘ஒருசொற் கேளீர்’ துண்டறிக்கை. 23.04.2018 அன்று என் கைக்கு கிடைத்த அவர் அறிக்கைக்கு நான் 6.6.2018இல் பதிலளிக்க முன் வந்துள்ளேன். காரணம், பெரியவர் சீனி.விசுவநாதனின் துண்டறிக்கையை படித்த புதுக்கோட்டை ஞானாலயா கிருஷ்ணமூர்த்தி உட்பட பலர், “நீங்கள் மறுப்பளிக்க வேண்டாம்” எனப் பணித்தனர். “அவரது அகவையை மனதில் கொண்டு விட்டுவிடுங்கள்” என்றனர். அவரது உற்ற நண்பர் ஒருவர், “பாரதிப் படைப்புக்கள் தனக்கே சொந்தம் என்னும் மனநிலையில் அவர் வாழ்கிறார். என்ன செய்ய?” எனக் கூறிவிட்டு, “அவரது உடல்நிலைக்கு ஏதாவது ஆகிவிடும், அமைதியாக இருங்கள்” என வேண்டுகோள் விடுத்தார். ஆகவே, மாபெரும் சேவையை பாரதி உலகுக்கு செய்த அவரை தீண்டாமல் தள்ளி நின்றேன்.

ஆனால், அந்தளவுக்கு பெரியவர் சீனி.விசுவநாதனின் நடத்தை நயமாக இல்லை. அவரது துண்டறிக்கையில் வன்மம் பொங்க ‘நெஞ்சில் உரமுமின்றி நேர்மைத் திறமுமின்றி’ என்ற பாரதிப் பாடல் வரிகளை வேறு எடுத்தாண்டிருந்தார். பாரதி பாடல்களில் பல சௌகர்யங்கள் உள. பாடலை பாடிக்காட்டினால் உண்மை ஊமையாகி விடாது. நானும் அவரை பதிலுக்கு ‘படித்தவன் சூதும் வாதும் செய்தால் போவான் போவான் ஐயோ என்று போவான்’ என ஒரு பாட்டை துணைக்கு அழைக்கலாம். அந்தளவுக்கு குணம் குன்றிப்போய் விடக்கூடாது. போகிற போக்கில் அவர் அனுப்பிய கடிதத்திற்கு நாங்கள் அளித்த சட்ட ரீதியாக விளக்கத்தை ஏற்று பதிலளிக்காமல் அவதூறு அறிக்கையை சுற்றுக்கு விட்டார் சீனி. விசுவநாதன்.

சீனி. விசுவநாதனுக்கு இந்தச் சர்ச்சைகள் புதியதல்ல; அவர் ரா.அ. பத்மநாபனையே அசிங்கப்படுத்தியவர்; வம்பு பேசியவர்; சுரண்டிப் பார்த்தவர்; குத்திக் கிழித்தவர்.

‘சுயகௌரவம் மிக்க - முழுமையான தன்னிறைவைக் கொண்டுள்ள - பதிப்புரிமைச் சட்டத்தின் ஷரத்துக்கள் மீறப்படாத வகையில் கவனமாக நூலைப் பதிப்பித்துள்ளார்கள்’ (‘ஒருசொற் கேளீர்’ துண்டறிக்கை, பக். 27) என்ற அவரது வரிகளே என் நூலில் எவ்வித காப்புரிமை மீறலும் இல்லை என்பதற்கு சான்று.

பொதுவெளியில் பத்திரிகைப் பணியில் இயங்கி வரும் எனது இயக்கம் பற்றி பலர் அறிவர். அப்பட்டமாக ஒருவரின், அதுவும் துறை சார்ந்த புகழ்பெற்ற முன்னோடி ஒருவரின் ஆய்வுப்பணிகளை களவாடி என் பெயரில் போட்டுக் கொள்ளும் அளவுக்கு நான் மதியற்றவன் அல்லன். குறைந்தபட்ச அறிவுள்ளவன்கூட அதை செய்ய மாட்டான்? அந்த உண்மைப் புரிந்தும் கல்லெறிகிறார்கள் என்றால் அதன் உள்குத்து என்ன?

பாரதியின் மனைவி செல்லம்மா பாரதி எழுதிய 'தவப்புதல்வன் பாரதியார் சரித்திரம்' நூலையே குற்றம் பேசியவர்கள் உண்டு. தரமற்றது என்றவர் உண்டு. தங்கம்மாள், சகுந்தலா எழுதியக் குறிப்புக்களை 'குத்தி' பேசியவர்கள் உண்டு. கடந்த 40 ஆண்டு கால வரலாற்றை பின்நோக்கிப்போய் தேடுபவர்கள் அந்தக் கசப்புக்களை கண்டறியலாம்.

செல்லம்மாள், தங்கம்மாள், சகுந்தலா அளவுக்கு பெரியவனல்ல நான். சிறுபிள்ளை. ஆகவே, என் ஆய்வில் ஏதேனும் வழு நிகழ்ந்திருக்கலாம்.

இதே சீனி.விசுவநாதனின் பாரதி ஆய்வுகளில் குற்றம்குறைகள் உண்டு என பேட்டிக் கொடுத்துள்ளார் பாரதியின் கொள்ளுபெயர்த்தி விஜயபாரதி. அந்த பாரதி சர்ச்சைக்கு பிள்ளையார் சுழிப் போட்டவர் தளவாய் சுந்தரம். 'தீராநதி' (ஏப்ரல் 2004) இதழில் இவர் எடுத்த நேர்காணலுக்கு இந்த பாரதி ஆய்வுலகம் என்ன சொன்னது? பாரதியை உயிரியல் வாரிசாகக் கருதி யாரும் சொந்தம் கொண்டாட முடியாது என்றது. அந்தப் பேட்டியில் விஜயபாரதி, "கால வரிசைப்படுத்தி அமைக்கப்பட்ட, ஆய்வுப் பதிப்புகள் என தொகுக்கப்பட்டு வெளிக் கொணரும் ஆர்வத்தில், ஆதாரமற்ற படைப்புக்களை இடைச்செருகல்களாக வெளியிட்டுள்ளார்கள். மேலும், பாரதி நூல்களில் பொருத்தமற்ற விளக்கங்கள், குறிப்புகள் பின்னிணைப்பாக இணைக்கப்பட்டுவிட்டன"என்று வாதிட்டுள்ளார். இங்கு 'காலவரிசை' என விஜயபாரதி பூடகமாக கூறியிருந்தது வேறு யாரையுமல்ல, சீனி. விசுவநாதனைதான்.

அன்று பாரதி படைப்புகளின் பொதுவுடைமையை விளக்கி, சீனி. விசுவநாதனின் 'ஆங்கில ஆசான்' கி.ஆ. சச்சுதானந்தம், 'தீராநதி' மே2004 இதழில் உரிமைக் குரல் எழுப்பி இருந்தார். அன்று பாரதியின் பொதுவுடைமைபற்றி வாதம் செய்தவர்கள்தான் இன்று நாட்டுடமையாக்கப்பட்ட பாரதியின் கட்டுரைத் தலைப்புகளை நான் பயன்படுத்தியது குற்றம் என்கிறார்கள். காப்புரிமைச் சட்ட விதி, 'படைப்பாளி மறைந்து 60 ஆண்டுகள் சென்றபின் அதற்கான உரிமை பொது வெளிக்கு வந்துவிடும்' என்கிறது. பாரதி மறைந்து 100 ஆண்டுகளை நாம் எட்ட இருக்கிறோம்; யாருக்கு உரிமை என உலகம் புரிந்துகொள்ளட்டும். மேலும், பாரதியின் படைப்புகள் நாட்டுடமையாக்கப்பட்டவை என்பதையும், யாரும் அதனை எடுத்து ஆய்வுக்காக குறிப்பிடலாம் என்பதையும் அறியாதவரா இந்த அறிஞர் சீனி.விசுவநாதன்.

சீனி. விசுவநாதன் தனது துண்டறிக்கையில் கட்டம் கட்டி சில ஒப்புமைகளை விளக்கி இருக்கிறார். டி.எஸ். சொக்கலிங்கத்தின் 'எனது முதல் சந்திப்பு' நூலில் வரும் 'பாரதி' கட்டுரையை சீனி. விசுவநாதன் தனது 'தமிழகம் தந்த மகா கவி (1978 ) நூலில் (கட்டுரை எண் 26, பக். 158-161) பயன்படுத்தி உள்ளதாக கூறியுள்ளார். அதை எப்படி நான் பயன்படுத்தலாம் எனக் கேட்டிருக்கிறார். டி.எஸ். சொக்கலிங்கத்தின் 'எனது முதல் சந்திப்பு' 1956இல் வெளியான நூல். 22 ஆண்டுகள் கழித்து தனது தொகை நூலுக்கு இவர் எடுத்தாண்டுள்ளார். இது இவருக்காக எழுதித்தந்த படைப்பல்ல. 'பாரதி' ஆய்வுலகம் முழுவதும் அடிக்குறிப்பாக சுட்டிக்காட்டப்படும் ஒரு கட்டுரையை தனக்கு உரிமையாக்கிக் கொள்ளும் இவரது செயலை நோக்கி கேள்வி எழுப்ப மனம் வராத அ. ராமசாமி என்னை சிலுவையில் அறையத் துடிக்கிறார். சொக்கலிங்கத்தின் கட்டுரையை நான்தான் கண்டறிந்து தந்துள்ளேன் என நானெங்கும் குறிப்பிடவே இல்லை.

எனது 'பாரதி விஜயம்' நூலிலுள்ள சகல கட்டுரைகளும் நேரடியாக பாரதியைக் கண்டு பழகியவர்கள் என்ற கோப்புக்குள் கட்டம் செய்யப்பட்டுள்ளன. 'பாரதி விஜயம்' கட்டுரைகளை நான் திரட்ட தீர்மானித்தபோது நேரடியாக பத்திரிகைப் பதிவுகளை மட்டுமே கணக்கில் ஏற்க வேண்டும் என்பதில் உறுதியாக நின்றேன். அவ்வாறு தேடி எடுத்த கட்டுரைகளுக்கான பத்திரிகை நகல் முழுவதும் என்னிடம் உள்ளது. நேரடித் தரவைத் தேடி எடுத்தவன் என்ற முறையில் நான் ஏன் இதர பதிப்புகளை பற்றி விசனப்பட வேண்டும்?

அடுத்த கட்டுரை வ.உ. சிதம்பரம் பிள்ளையின் 'பாரதிக்கும் எனக்கும் பழக்கம்'. இதையும் சீனி. விசுவநாதன் தனது மேற்கூறிய நூலில் (கட்டுரை எண் 16, பக். 45-48) பயன்படுத்தியுள்ளேன் என்கிறார். ஆனால், அந்தக் கட்டுரை முழு வடிவத்தில் இல்லை. நான் அதன் முழு வடிவத்தையும் எடுத்தாண்டுள்ளேன். இதை சீனி. விசுவநாதனே அவரது துண்டறிக்கையில் ஒப்புக்கொண்டுள்ளார். வ.உ.சி. கட்டுரை 1946இல் 'வி.ஓ.சி. கண்டபாரதி' என நூலாக வந்தது. இதனை 'சந்தியா' பதிப்பகம் 2002இல் வெளியிட்டுள்ளது. முறைப்படி இதனை அறிவு நாணயத்தோடு விவரக் குறிப்பில் குறிப்பிட்டுள்ளேன். ஆனால், சீனி. விசுவநாதன், முழுமைப் பெறாத இவரது 3 பக்க கட்டுரையும் முழு வடிவிலுள்ள எனது தொகுப்பிலுள்ள 30 பக்க கட்டுரையும் ஒன்றே என்கிறார். மூன்று பக்கக் கட்டுரையும் முப்பது பக்கக் கட்டுரையும் ஒன்றே என வாதிடுபவரிடம் நாம் என்ன பேச முடியும்?

பாரதி ஆய்வு உலகில் புழங்குபவர்களுக்கு தெரியும், எஸ்.ஜி. ராமாநுஜலு நாயுடுவின் 'ஸ்ரீமான் ஸி. சுப்பிரமணிய பாரதி'கட்டுரை பற்றிய விவரம். அந்தக் கட்டுரையை ஏ.கே. செட்டியார் கண்டறிந்து, தனது குமரிமலரில் (1977 செப்டம்பர்) முதன்முதலாக வெளியிட்டார். அடுத்து 'தாமரை'யில் டிசம்பர் 1980 தொ.மு.சி. ரகுநாதன் அதனை எடுத்து வெளியிட்டார். அதேபோல் 'பாரதியைப் பற்றிய நண்பர்கள்' (1982 ஜுலை) நூலில் பாரதி அன்பர் ரா.அ.


பாரதியுடன் செல்லம்மாள் பாரதி

பத்மநாபன் புழங்கியுள்ளார். சமீபத்தில் வந்த ஆ.இரா. வேங்கடாசலபதியின் 'சென்றுபோன நாட்கள்' (2015) நூலில்கூட இக்கட்டுரை இடம்பெற்றுள்ளது. இக்கட்டுரையை 'மரணத்தை வென்ற மகாகவி' நூலில் (கட்டுரை எண் 9, பக். 56-81) பயன்படுத்தியுள்ளதாக கூறுகிறார் சீனி. விசுவநாதன். இவரது நூலை நான் தொட்டுக்கூட பார்க்கவில்லை. குமரிமலரில் ஏ.கே. செட்டியார் 1977இல் எடுத்துப் போட்டதையே கொடுத்துள்ளேன். ஏ.கே. செட்டியாரின் முழுப் படைப்புகளையும் நூலாகத் தொகுத்துள்ள நான் 'குமரிமலர்' முழு இதழ்களையும் அலசி ஆராய்ந்திருக்கிறேன். புதுக்கோட்டை ஞானாலயா நூலகத்தில் மூன்று நாட்கள், தமிழ்நாடு ஆவணக்காப்பகத்தில் மூன்று ஆண்டுகள், மறைமலை அடிகள் நூலகத்தில் பல மாதங்கள், ரோஜாமுத்தையா நூலகத்தில் பல மாதங்கள், மேலபாதி திரு.வி.க. நூல்நிலையம், கும்பகோணம் சிவகுருநாதன் நூலகம் என முதுகு எழும்புத் தேய உட்கார்ந்து வேலை செய்திருக்கிறேன். இதற்கு இந்த மூன்று நிறுவனங்களில் பணிபுரியும் பொறுப்பாளர்களே சாட்சி. ஆனால், என்னிடம் கொண்டு வந்து சான்றுகளை சமர்ப்பி என்கிறார் சீனி. விசுவநாதன். இக்கட்டுரையைப் பயன்படுத்திய பலரில் பெரியவர் சீனி. விசுவநாதனும் ஒருவர். ஆனால், இவரே ஏதோ எஸ்.ஜி. ராமாநுஜலு நாயுடுவிடம் கைப்பட எழுதி வாங்கிப் பிரசுரித்தவர் போல் கிடந்து குதிக்கிறார். அவர் கடிதம் போட்டதும் அவர் நடத்தும் தனியார் காவல் நிலையத்திற்கு நான் போய் விளக்கம் அளிக்க வேண்டுமாம்? என்ன நியாயம் இது? 1977இல் முதன்முதலாக பயன்படுத்திய ஏ.கே.செட்டியாருக்கும் அவரது குமரிமலருக்கும் முறையாக நான் நன்றி கூறியுள்ளேன்.

அடுத்து வை.சு. ஷண்முகம் எழுதிய 'காரைக்குடியில் பாரதியார்' கட்டுரை. பிறகு ராய. சொக்கலிங்கம் எழுதிய 'காரைக்குடியில் பாரதியார்' கட்டுரை. இவை இரண்டும் முருகப்பா மணிவிழா மலர் 1953இல் வெளியானவை. மறுப்பதிப்பாக 'குமரிமலர்' 1982 மே இதழில் வந்தது. இந்த இரண்டு கட்டுரைகளின் அச்சு நகல் என் வசம் உள்ளது. வை.சு. ஷண்முகம் கட்டுரையை பெரியவர் சீனி. விசுவநாதன் 'மகாகவி பாரதி மஞ்சரி' (1982, கட்டுரை எண் 5, பக்.10 - 12) நூலில் பயன்படுத்தியிருப்பதாகத் தெரிவிக்கிறார். ராய.சொ.வின் கட்டுரையை 'மகாகவி பாரதி: கட்டுரை மணிமாலை' (1982, கட்டுரை எண் 16, பக். 64-69) நூலில் பயன்படுத்தியுள்ளதாகக் கூறுகிறார். இக்கட்டுரைகளை அவர் எங்கிருந்து கையாண்டார் என நான் அறியேன். நான் பயன்படுத்தியதற்கான தரவுகளை என் 'பாரதி விஜயம்' நூலில் இணைத்துள்ளேன். இவை புதியதாகக் கண்டுப்பிடிக்கப்பட்டவை என்று நானெங்கும் வாக்குறுதி தரவில்லை.

இதுபோக புதியதாக நடராசன் என்பவரின் 'பாரதியும் சங்கமும்', 1982 ஆகஸ்ட் 'குமரி மலர்' கட்டுரை ஒன்றையும் கண்டடைந்து தந்துள்ளேன். இவர்தான் காரைக்குடி இந்துமதாபிமான சங்கத்திற்கு பாரதி 1919இல் விஜயம் செய்த நாளில் புகைப்படம் எடுக்க ஏற்பாடு செய்தவர். இவர் மூலம் பாரதியை படம் எடுத்தவர் நொண்டி ராஜு என கண்டறிந்து கூறியுள்ளேன். இக்கட்டுரையால் வரலாற்றுச் சிறப்பு மிக்க பாரதி புகைப்படத்தை எடுத்தவர் பெயர் வெளிச்சம் பெற்றுள்ளது. பல ஊர்களுக்கு பயணித்து நேரடியாக திரட்டப்பட்டவை எனது தகவல்கள்.

ராய. சொக்கலிங்கம் மட்டும் பாரதியை சந்தித்தது பற்றி மூன்று கட்டுரைகள் எழுதியியுள்ளார். ஒன்று, 'பாரத சக்தி' 1947ஆண்டு மலரில் எழுதப்பட்டது. இரண்டு, முருகப்பா மணிவிழா மலர் 1953இல் எழுதப்பட்டது. மூன்று, 'சித்ரபாரதி'க்காக பெரியவர் ரா.அ. பத்மநாபனுக்கு விளக்கி எழுதிய கடிதம். பலரும் 1953இல் வெளியான ராய.சொ.வின் கட்டுரையையே பயன்படுத்தியுள்ளனர். நான் 1953க்கு முன்பாக சுத்தானந்த பாரதி நடத்திய 'பாரதசக்தி' ஆண்டு மலர் 1947இல் பிரசுரமான ராய.சொ.வின் கட்டுரையையே தேடிப்பிடித்துள்ளேன்.

உ.வே. சாமிநாதையர் எழுதிய 'சுப்பிரமணிய பாரதியார்' கட்டுரையை 'நினைவு மஞ்சரி' இரண்டாம் பாகம் நூலிலிருந்து எடுத்தாண்டுள்ளேன். 'கலைமகள்' இதனை 1944இல் நூலாக வெளியிட்டுள்ளது. நேரடியாக உ.வே.சா. நூலில் இருந்து பெறப்பட்ட கட்டுரைக்கு சீனி. விசுவநாதனுக்கு ஏன் நன்றி கூற வேண்டும்?

இவை சில உதாரணங்கள். என் நூலில் பயன்படுத்தப்பட்டிருக்கும் கட்டுரைகள் எல்லாம் எங்கெங்கு இருந்து எடுக்கப்பட்டன

என்பதற்கான குறிப்பை நூலில் தந்துள்ளேன். சம்பந்தப்பட்டவர்களுக்கு நன்றி தெரிவித்துள்ளேன். அக்கட்டுரைகளின் நகல் பிரதி என்னிடம் உள்ளது. பல கட்டுரைகளின் மூலப் பிரதியின் நகல், முறையாக எழுதிக் கொடுத்து ஆவணக் காப்பகத்திலிருந்து பெறப்பட்டதற்கான ரசீதும் என்னிடம் உள்ளது. பாரதி ஆய்வு என்ற பெயரில் 'உளவு போலீஸ்' வேலை பார்க்கும் பல்கலைக்கழக 'யாப்பு அதிகாரி'கள் வேண்டுமானால் கேட்டுப்பெற்று பரிசோதித்துக் கொள்ளலாம்.

சீனி. விசுவநாதனின் பல குற்றச்சாட்டுகள் வெறுப்பில் எழுதப்பட்டவை. அப்படியென்றால் இவரின் நூலில் இருந்து ஒரு பகுதியைக்கூட நீங்கள் கையாடவில்லையா என ஒரு சாதாரண வாசகன் கேட்கக்கூடும். ஆம், நான் கையாடவில்லை. மேற்கோள் காட்டியுள்ளேன். இரண்டிற்கும் பாரிய வேற்றுமைகள் உள்ளன. அப்படி நான் மேற்கோள் காட்டிய விஷயங்களுக்கு முறைப்படி 'பயன்பட்ட நூல்கள் பட்டியலில்' பதிவு செய்திருக்கிறேன். மேற்கோளாக காட்டப்பட்ட பெரியவர் சீனி. விசுவநாதன் தரவுகளுக்கு முறையாக எனது நூலில் சான்றுப் பட்டியல் தரப்பட்டுள்ளது. களவு செய்பவன் எவனும் பட்டியல் போட்டு உலகுக்கு சொல்லமாட்டான்.

ஒரு ஆய்வு நூல் பொதுவெளிக்கு வந்தபிறகு அதிலுள்ள தரவுகளை ஆய்வு நோக்கத்திற்காக எடுத்து சுட்டுவது வாழையடி வாழையாக வரும் மரபு. இதை உணராமல் என் வீட்டுக்கு வந்து அனுமதிப்பெறு என்கிறார் சீனி. விசுவநாதன். உலகளவில் இப்படியொரு மரபு எந்தநாட்டிலும் இல்லை. அதை உணர்ந்தும் வதந்தி பேசுகிறார். புரட்டு செய்கிறார்.

என் பிள்ளையைக் காணவில்லை என்றால் கண்டுபிடித்துக் கொடுக்கலாம்; ஊரார் பிள்ளைகள் எல்லாம் தன் பிள்ளை போல் தெரிகிறது என்பவரிடம் என்ன பேசுவது?

பாரதி சுயசரிதை குறித்து ஆய்வு செய்ய வரும் எவரும் முதலில் என்ன செய்வார்கள்? தனக்கு முன்பாக வந்துள்ள பாரதி சுயசரிதை நூல்கள் எத்தனை? அவை எந்தெந்த காலங்களில் வெளியாகியுள்ளன என ஒரு பட்டியல் தயாரிப்பார்கள். அப்படி தயாரிக்கும் பட்டியலில் நூல்கள் வெளியான காலங்கள் இடம்பெறும். அதன்பொருட்டே நான் சேகரித்த பாரதி சுயசரிதை நூற்பட்டியலை விரிவாக சுட்டிக் காட்டியுள்ளேன். அதில் 1928இல் தொடங்கி 1982 வரை பல்வேறு நூல்கள் இடம்பெற்றுள்ளன. இவைபோக சமீபத்தில்கூட பாரதியின் சுயவரலாற்று நூல்கள் (கிழக்கு, செண்பகா பதிப்பகம்) வந்துள்ளன. அந்தப் பட்டியலை யார் தயாரித்தாலும் கால வரிசை ஒன்றுபோல்தான் வரும். வர முடியும். அந்தப் பட்டியலும் தனக்கே சொந்தம் என்கிறார் சீனி. விசுவநாதன். ஆய்வுக்கு மறுப்பு கூறலாம். அறியாமைக்கு எப்படி மருந்து தருவது?

7 ஜனவரி 1921இல் தொடங்கி 4.5.1921 வரை பாரதி கலந்து கொண்ட நிகழ்ச்சிகளின் பட்டியலை நான் 'பாரதி விஜயம்' நூலில் குறிப்பிட்டுள்ளேன். இவை யாவையும் என் கண்டுப் பிடிப்புக்கள் அல்ல; நான் இப்பகுதியில் பயன்படுத்தியுள்ள தரவுகள் யாவையும் ஆய்வாளர் ஆ.இரா. வேங்கடாசலபதி வெளியிட்டுள்ள 'பாரதி விஜயா கட்டுரைகள்' (நவம்பர் 2004) நூலில் பக்கம் 423முதல் 429 வரை உள்ள செய்திகளில் இருந்து பெறப்பட்ட தலைப்புக்கள் மற்றும் காலக்குறிப்புக்கள். அதனை உரிய முறையில் 'பயன்பட்ட நூல் பட்டியல்' பகுதியில் குறிப்பிட்டுள்ளேன். நான் 2004இல் வெளிவந்த ஆ.இரா.வேங்கடாசலபதியின் நூலில் இருந்து குறிப்புகளைப் பெற்றுள்ளேன். சீனி. விசுவநாதன் இதை 2010இல் தன்னுடைய கண்டுபிடிப்பு என்கிறார். காலத்தால் 2010 முந்தையதா 2004 முந்தையதா? யார் முன்பாக கண்டறிந்தவர் என்பதை என் மறுப்பை படிக்கக் காத்திருக்கும் சிலர் அலசி பார்த்து தனது தாகத்தை தணித்துக் கொள்ளட்டும்.

'கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள்' மொத்தம் 12 தொகுதிகளில், பெ. தூரனின் 'கலைக்களஞ்சியம்' உட்பட பல நூல்களை பக்கம்பக்கமாக பயன்படுத்தியுள்ளார் சீனி. விசுவநாதன். அதற்கெல்லாம் முன் அனுமதி பெற்றுள்ளாரா?

சீனி. விசுவநாதனிடம் செல்லம்மா மறைவு தேதி குறித்த ஒரு சிறு சந்தேகத்திற்காக தொடர்புகொண்டு 'சந்தியா' நடராஜன் வினவிய போது, 'எனக்குத் தெரியாது' எனத் தொடர்பைத் துண்டித்தார். பாரதியின் 'ஞானரதம்' பிரதியை சந்தியா வெளியிட விரும்பியது. இவரது 'கால வரிசைப்படுத்தப்பட்ட பாரதி படைப்புகள்'பயன்படுத்தலாம் என நினைத்தார் 'சந்தியா' நடராஜன். 'சீனி வருத்தப்படுவார் அதிலிருந்து எடுக்கவேண்டாம்' என அவரது பேராசிரிய நண்பர் ஒருவர் கூறினார். ஆகவே, நான் ஆவணக்காப்பகத்தில் இருந்து அதன் நகல் எடுத்து கொடுத்து பதிப்பிக்கச் சொன்னேன். மேற்கொண்டு புதுச்சேரி மகாகவி பாரதியார் அருங்காட்சியகம் மற்றும் ஆய்வு மைய நூலகம் சென்று அதன் அன்றைய நூலகர் செல்வி. செங்கமலத்தாயார் உதவியுடன் பதிப்பித்தோம். இதை சீனி. விசுவநாதனும் அறிவார். இந்த நேர்மையை பேணும் பதிப்பகம் இவரது உழைப்பைச் சுரண்டி ஊறுகாய் போடும் அளவுக்கு தரம் இறங்கிப்போகாது.

அ.ராமசாமி கூறுவதைப் போல 'பாரதி: விற்கும் சரக்கு' என்பதால் விளைந்த நூலல்ல 'பாரதி விஜயம்'. வாசகப் பயன்பாட்டின் தேவை கருதி பிறந்தப் பிள்ளை அது. ஆகவேதான் அதன் ஆகிருதியை உணர்ந்த வாசக உலகம் அந்நூலைக் கொண்டாடியது. பல்வேறு பாரதிக் காதலர்கள் அதனை ஆராதிக்கின்றனர்.

அன்று தனிச்சொத்தாக ஏவி.எம்.செட்டியாரிடம் பாரதியின் பாடல் உரிமை சிக்கித் தவித்தது. அதை மீட்டு, பாரதி பாடலுக்கு விடுதலைப் பெற்றுக் கொடுத்தது ஒரு தலைமுறை. இன்று வரலாறு திரும்புகிறது. மீண்டும் பாரதிக்கு ஒரு விடுதலைப் போர் தொடங்கும் தேவை பிறந்துள்ளது.

வாழ்க பாரதி! வாழிய மேன்மக்கள்!! ●

கடற்கரய் மத்தவிலாச அங்கதம் <thonmam@gmail.com>

அம்ருதா பதிப்பக வெளியீடுகள்




விலை ரூ.80-00




விலை ரூ.110-00




விலை ரூ.170-00




விலை ரூ.100-00




விலை ரூ.90-00




விலை ரூ.130-00




விலை ரூ.140-00




விலை ரூ.80-00

**அம்ருதா பதிப்பகம்**

1, கோவிந்த ராயல் நெக்ஸ்ட்
அடுக்ககம்
12, இரண்டாவது தெரு
மூன்றாவது பிரதான சாலை
சி.ஐ.டி.நகர் கிழக்கு
நந்தனம்
சென்னை 600035

அலைபேசி:
**94440 70000**

# கருணாகரன் கவிதைகள்



1. புள்ளி

முடிவேயில்லாத இந்தச் சிரிப்பைத் தவிர்த்துவிட்டு
எங்கே செல்வதென்று தெரியவில்லை
அவள் சிரித்துக் கொண்டேயிருக்கிறாள்.
திடீரென எழுந்து சிரித்துக்கொண்டே நடந்து செல்கிறாள்

வழியிலே எதிர்ப்படுவோரைப் பற்றி அவள்
பொருட்படுத்தவில்லை
ஓயாத சிரிப்பு அவளுடன் கூடவே செல்கிறது
அலையும் கூந்தலும்
கலைந்த உடையுமாகச் சிரிப்புக்கு எதிர்த்திசையில்
அவளுடைய பருவங்கள் சிதைந்து கிடக்கின்றன.

இடையில் நின்று எதையோ யோசித்த பிறகு
திரும்பி நடக்கிறாள்
செல்லும் வழியும் திசையுமறிவாளா?
திரும்பும் இடமும் சுவையும் உணர்வாளா?

இதையெல்லாம் பொருட்படுத்தாமல்
கடந்து சென்று கொண்டிருக்கிறார்கள் எல்லோரும்
அவர்களுக்கு அது பழகியதொன்றாக இருக்கலாம்
முடிவில்லாத சிரிப்பும் முடிவேயில்லாத அழுகையும்
பொருட்படுத்தப்படாமல் போய்விடுகின்றன போலும்.

இதோ என்னிடமே நேராக வருகிறாள்
என்ன கேட்கலாம்...?
எப்படி எப்படி...?

யாருக்காக விரிந்தது இந்தச் சிரிப்பு?
எதற்காக அவிழ்ந்து கொண்டிருக்கின்றன
இந்த அலைகள்?
எங்கிருந்து பிறந்தது இந்த மாயப் பூ?
உன்னுள்ளொளிரும் இந்த மின்னல்கள் ஏனிப்பிடி
சிரிப்பாக உதிர்கின்றன?

கேட்பதற்கிடையில்
வந்த வேகத்திலேயே என்னை விலகிச் செல்கிறாள்
எங்கோ எதையோ நோக்கி
சிரித்தபடியே போகிறாள்

திடீரெனச் சிரிப்பதை நிறுத்திவிட்டு
தொலைவை வெறிக்கிறாள்
ஏனோ தெரியவில்லை
அடுத்த கணம் அழுகையாக வெடிக்குமோ என்று
பார்த்துக் கொண்டிருந்தேன்

மின்னல் தெறித்தொளிர
சட்டென மறுபடியும் வெடித்துச் சிரித்தாள்

அந்தச் சிரிப்பை எப்படிப் பின் தொடர்வது என்று தெரியாமல்
தவித்துக் கொண்டு நிற்கிறேன்



2. தத்தளிப்பு

இன்று காலையைத் திறந்துகொண்டு வந்தவள்
என் முன்னே நின்றாள்
எந்த வார்த்தைகளும் அவளிடமில்லை.
மௌனத்தின் முன்னே
எத்தனை கணம்தான் இருவர் நிற்க முடியும்?

“சொல்” என்ற ஒற்றைச் சொல்லினால்
அவளைத் திறக்க முயன்றேன்.

மெல்ல இறங்கினாள்
நினைவின் பாதாளத்துள்
தொடர
இருண்ட பாதாளத்தின் அடியில்
காயாத குருதி நெடி
படிக்கட்டுகளில்
அலையடங்காக் கண்ணீர்ச் சூடு

திரும்புமிடமெங்கும் விசும்பும் ஒலிக் கூவல்
சிதைந்த முகங்களின் ஏக்கப் பார்வை முள்
கால்கள் இடறுப்படக் கவனித்தேன்
துண்டாகிய கரங்கள், சிதம்பிய முகக்கூர்
விழிமூடாத் துயரம் பெருகி அனலாகி
வானெழுந்து நிற்க

வருகிறேன் என்று சொல்லவும்
செல்கிறேன் என்று விடைபெறவும்
முடியாத தத்தளிப்பில்
தடுக்கி விழுகிறேன்
கண்ணீர்க் குருதியில்

அவளோ சலனமற்று உறைகிறாள்
காலத்திரை அசைந்தாடுகிறது ●

கருணாகரன் <poompoom2007@gmail.com>

சட்டகப் பார்வை

# நவீனத் தமிழ் அரங்கவியல்
# தொடரும் சில செயல்பாடுகள்

அ. ராமசாமி

பிரித்துப்பிரித்து விளையாடுவது நவீனத்துவத்தின் மூன்றாவது விதி. முதல் இரண்டு விதிகள் என்னென்ன என்று கேட்கவேண்டாம். அவைபற்றி இங்கே எழுதப் போவதில்லை. எழுதவேண்டுமென்ற கட்டாயமுமில்லை. 'நவீன' என்ற முன்னொட்டோடு இயங்கத் தொடங்கிய தமிழ்க் கலை, இலக்கியச் செயல்பாடுகள் தொடர்ச்சியாகப் பிரிந்துகொண்டே இருக்கின்றன. ஆனால், அந்த விளையாட்டிலிருந்து அரங்கவியல் மட்டும் தப்பித்துவிடும் எத்தனத்தோடு தொடர்ந்து முயற்சித்துக் கொண்டே இருக்கிறது. நவீன நாடகம் பலமாகத் தேய்ந்தும் கொஞ்சமாகத் தீவிரப்பட்டும் தொடர்கின்றது. இந்நிலை தமிழின் பலமோ பலவீனமோ அல்ல, அரங்கவியலின் பலமும் பலவீனமும்.

தமிழ்நாட்டில் மட்டுமல்லாது, தமிழர்களின் வெகுமக்கள் கலைகளாக அறியப்படும் சினிமாவிலும் இசையிலும் 'நவீன' என்ற முன்னொட்டை ஒட்டிக்கொள்ள விரும்பும் ஒரு கலைஞரோ ஓர் இயக்குநரோ இல்லை. நவீனத்துவத்தின் மீது ஆழமான பார்வைகள் கொண்ட ஒரு விமரிசகர் அல்லது கருத்தியலாளர், விரிவான அலசல் வழியாக ஒருவரை அடையாளப்படுத்திச் சொல்ல விரும்பினாலும், அந்த இசைக் கலைஞர் அல்லது சினிமா இயக்குநர் அதனை ஏற்றுக்கொள்வாரா என்பது சந்தேகம்தான். மரபின் பிடியிலிருந்து விலகாமல் இருக்கும் அவர்களுக்கு 'நவீனம், நவீனத்துவம்' போன்ற சொற்களின் மீது ஒவ்வாமையும் எரிச்சலுமே தங்கியுள்ளன. அவர்களின் வணிகம் சார்ந்த வெற்றிக்கும் பெருந்திரளின் ஏற்புக்கும் அந்தச் சொல் இடையூறாக மாறிவிடும் என்ற அச்சமும்கூட இருக்கிறது. ஆனால், அரங்கியல் கலையோ ஓவியக் கலையோ சிற்பக் கலையோ அப்படியான எதிர்மறை மனநிலையோடு இல்லை என்பது கவனிக்கப்பட வேண்டிய ஒன்று. கவிதை, புனைகதை, நாடகம் போன்ற எழுத்துக் கலைகளும் இல்லை. அவற்றில் செயல்படுபவர்கள் ஒருபடிமேல் நோக்கி நகர்ந்து, 'நவீன அடையாளம் கிடைக்காதா?' என்று ஏங்குகின்றனர். ஒரு விமரிசகன் அப்படிச் சொல்ல வேண்டுமெனக் காத்திருக்கின்றனர்.

தன்னை இன்னொருவருக்குப் புரியவைக்க முடியாது என்று தெரிந்தபோதிலும், தொடர்ச்சியாக முயற்சி செய்வது நவீனத்துவக் கலைகளின் தொடர் நடவடிக்கைகளாக இருக்கின்றன. தனிமனிதர்களின் தன்னிலை உருவாக்கத்தில் விருப்பங்களுக்கும் சுதந்திரத்துக்கும் தடையில்லை என்ற அளவில் கொண்டாடப்படும் ஒன்றாக இருக்கிறது நவீனத்துவம். ஒவ்வொருவரின் விருப்பங்களும் தேவைகளும் சுதந்திரத்தின் அளவுகோல்களும் வேறுவேறு என்பதால், அவர்களின் வெளிப்பாடாக இருக்கும் கலைகளும் வேறுவேறாகவே இருக்கின்றன. நவீனத்துவத்தின் வெளிப்பாடுகளாக இருக்கும் நவீனக் கவிதைகளும் நவீன ஓவியங்களும் அவர்களது தனிமைக்கும், அமைப்புக்குள் நின்று செயல்பட முடியாத இயலாமைக்கும் தன்னிரக்கத்திற்கும் ஏற்றனவாக இருக்கின்றன. இசையாக்கமும்கூட அவ்வாறிருக்க வாய்ப்புண்டு. ஆனால், இங்கே அத்தகைய இசையாக்கங்கள் உருவாக்கப்பட வேண்டுமென்ற எண்ணமே இல்லை.



நவீன என்ற சொல்லாடலை முதன்முதலில் ஒட்டிக்கொண்ட ஓவியக் கலையில் தீவிரமாகச் செயல்படும் நவீன ஓவியர்கள் இருக்கிறார்கள். ஆனால், ஓவிய இயக்கங்கள் இல்லை. இதே நிலைதான் நவீனக் கவிதைகளுக்கும் நவீனப் புனைகதைகளுக்கும். ஆனால், நாடகத்துறையில் ஒவ்வொருவரும் நவீன நாடகக்காரராக அறியப்படுவதோடு - நாடகக்குழுவின் பகுதியாக அறியப்பட்டு, அதன் தொடர்ச்சியாக நவீன நாடக இயக்கத்தின் பகுதியாக ஆகிவிடுவது, தவிர்க்க முடியாததாக ஆகிவிடுகிறது. இந்த எத்தனிப்பின் வெளிப்பாடுகளில் சில அமைப்புகளும் சில நிறுவனங்களும் சில தனிநபர்களும் குமிழிகளாக அலைகின்றனர்.

நவீன நாடகச் செயல்பாடுகளின் நிரந்தரக் காலக்காட்டிக் குறிப்புகளில் ஒன்றாக மாறியிருக்கும் மாற்று நாடக இயக்கத்தின் பயிற்சிமுகாமும் நாடகவிழாவும் பரிசளிப்பும் முதன்மையான பெருங்குமிழியாகக் கவனம் பெற்றிருக்கிறது. திருப்பத்தூர் (வேலூர்) தூயநெஞ்சக் கல்லூரியில் தமிழ்த்துறை ஆசிரியராக இருக்கும் கி. பார்த்திபராஜாவை மையமாக்கி நிகழும் தொடர் நிகழ்வுகள், தமிழ்நாட்டின் பல கல்லூரிகளுக்கும் ஆங்காங்கே நாடகச் செயல்பாடுகளில் ஈடுபடும் நாடகக் குழுக்களுக்கும் தேவையான நடிகர்களையும் பின்னரங்கக் கலைஞர்களையும் தயாரித்து அனுப்பிக் கொண்டிருக்கிறது. பயிலரங்கின் பின்னிகழ்வுகளாக நடக்கும் நாடகவிழா, ஏற்கெனவே மேடையேற்றம் கண்ட நவீன நாடகங்களுக்கும் இன்னொரு மேடையேற்ற வாய்ப்பை வழங்குகிறது. பொதுநிலையில்



வழங்கப்படும் விருதுகளில் ஒதுக்கப்படும் நாடகச் செயற்பாட்டாளர்களுக்கு, நாடகவிழாத் தொடக்கத்தில் அளிக்கப்படும் விருதுகள், தங்கள் அரங்கச் செயல்பாடுகள் மீதான கையறுநிலையைக் கைவிடச் செய்கிறது; சில நேரங்களில் திரும்பவும் செயல்படத் தூண்டுகிறது.

ஆறு ஆண்டுகளாக நடக்கும் பயிலரங்கில் பங்கேற்றவர்கள் அரங்கியல் செயல்பாடுகளோடு நின்றுவிட வாய்ப்பில்லை. பின்னாட்களில் சின்னதிரைகளிலும் பெருந்திரைகளிலும் திறமைகளைக் காட்டக்கூடும். பயிற்சி முகாமைத் திட்டமிட்டு நடத்தும் கி.பார்த்திபராஜாவின் நோக்கமும் பயிற்சியாளர்களின் பயிற்சியும் நாடகத்தில் - நவீன நாடகங்களில் பங்கேற்று வெளிப்பட வேண்டும் என்பதாக இருந்தாலும், பங்கேற்பாளர்களின் நோக்கங்கள் அதனோடு இணைவதில்லை என்பது கடந்த காலம் கற்றுத் தந்துள்ள பாடம். கூத்துப்பட்டறை பல நடிகர்களைச் சினிமாவுக்கு வழங்கியுள்ளது. மதுரை நிஜநாடக இயக்கமும்கூட. இவையல்லாமல் ஆங்காங்கே நடந்த பல அரங்கப் பயிலரங்கில் பங்கேற்றவர்களும் சினிமா நடிகர்களாக ஆகியிருக்கிறார்கள். தேசிய நாடகப் பள்ளியும் புதுச்சேரி நிகழ்கலைப் பள்ளியும் திரை நடிகர்களுக்கான பயிற்சிகளை வழங்கவில்லை என்றாலும், அங்கிருந்து வருகிறவர்கள் சினிமாவையும் நோக்கமாகவே கொள்கின்றனர்.

சென்னையில் இயங்கும் 10 -க்கும் மேற்பட்ட திரைப்படப் பயிற்சி நிறுவனங்களிலும் இந்நாள் நாடகக்காரர்களும் முன்னாள் நாடகக்காரர்களுமே நடிப்பைக் கற்றுத் தருகிறார்கள். தமிழ்ச் சினிமாவை முன்வைத்து நடிப்புச் சொல்லித்தரும் பயிற்சி முறைகளை இங்கே ஒருவரும் உருவாக்கித் தரவில்லை. சென்னைத் திரைப்படக் கல்லூரியில் கற்பிக்கும் நடிப்புப் படிப்பில்கூட அப்படியொரு பாடத்திட்டம் இருப்பதாகவோ, கற்பிக்கப்படுவதாகவோ அங்கிருந்து வந்தவர்கள் சொல்லவில்லை. பொதுவாகத் தமிழ்நாட்டில் இயங்கும் கலை சார்ந்த கல்வி நிறுவனங்களில் பாடத்திட்டத்தை முன்வைத்துக் கற்பிக்கும் முறைமைகளுக்கு முக்கியத்துவம் இருப்பதில்லை. குருகுலக்கல்விமுறை சார்ந்த கற்கைகளுக்கே மதிப்பிருக்கிறது. ஆனால், நவீன நாடகங்களுக்கான பயிற்சிப் பட்டறைகளின் பாடத்திட்டம் வேறானவை. செய்முறைகளும் உரைகளும் உரையாடலும் கலந்துகட்டித் தருபவை.

இந்த ஆண்டு நடந்த மாற்று அரங்கின் பட்டறையில் 90 பேர் இருந்தார்கள். 90 பேரை மூன்று குழுவாகப் பிரித்துத்தான் அடிப்படையான பயிற்சிகளை வழங்கினார்கள். காலையில் உடலை வசப்படுத்தும் சிலம்பம், யோகா, மூச்சுப் பயிற்சி போன்றவற்றிற்குப் பின் குரலை வளப்படுத்தும் பயிற்சிகள். பின்னர் குரலையும் உடலையும் இணைக்கும் பயிற்சிகள். காட்சிரூபங்களை உண்டாக்கும் கற்பனைப் பயிற்சிகள் என நீளக்கூடியன. செய்முறைப் பயிற்சிகளைக் கைவிட்டுக் கருத்தியல் தளத்தில் செயல்படும் என்னைப்போன்றவர்கள் உரையையும் உரையாடலையும் வழங்குவார்கள்.

எனது அமர்வில் மூன்று குழுக்களையும் - 90 பேர்களையும் - ஓரிடத்தில் அமர்த்தி, நாடகக்கலை எப்படி அனைவரும் - நாடகாசிரியன் தொடங்கி, ஓவியன், சிற்பி, ஒளியமைப்பாளன், ஒலியமைப்பாளன், இசைஞன், ஒப்பனையாளன், உடையமைப்பாளன், அரங்க அமைப்பாளன், நடிகர்கள் என அனைவரும் - இணைந்து இயக்குநர் என்னும் நெறியாளரின் வழிகாட்டலில் செயல்பட வேண்டும் என்பதை உரையாகச் சொன்னேன். நாடகக்கலையில் நடிக மையம், இயக்குநர் மையம், ஆசிரிய மையம் என





மூன்று முக்கிய மையங்கள் சார்ந்த செயல்பாடுகள் இருந்தாலும் பார்வையாளர்களைக் கட்டுக்குள் கொண்டுவருவதில் காட்டும் முனைப்புதான் நாடக வெற்றியின் ரகசியம். அதைச் செயல்பாடுகளோடு கருத்தியல் ரீதியாகவும் அறியவேண்டும்.

நாடகவிழாவின் தொடக்க நாளில் வழங்கும் விருதுகள் பெருமதிகொண்ட விருதுகளாக மாறியுள்ளன. கேரள நவீன நாடக இயக்கங்களுக்கும் தமிழ் நவீன நாடக இயக்கங்களுக்கும் ஆழமான பங்களிப்புச் செய்துள்ள பேரா.ராமானுஜம் பெயரில் மொத்தப் பங்களிப்புக்கான விருதொன்றைக் கடந்த ஆறாண்டாக வழங்கி வருகிறது. கடந்த இரண்டு ஆண்டுகளாக, 'நம்பிக்கை நாடகர்' விருதாக பெண் - ஆணென இளையோருக்கு இருவிருதுகள் வழங்கப்படுகின்றன. இந்த ஆண்டு முதல் நாடகக்காரர் ஞாநியின் பெயரில் அவரது குடும்பம் ஏற்படுத்தியுள்ள 'நாடக ஆசிரியர்' விருதும் சேர்ந்துள்ளது. இந்த ஆண்டு அந்த விருதுகளைப் பெற்ற பிரசன்னா ராமஸ்வாமி, ஞா.கோபி & அஸ்வினி காசி, எஸ்.எம்.ஏ.ராம் ஆகியோரும், வழங்கிப் பாராட்ட அழைக்கப்பட்ட பாரதி மணி, அ.ராமசாமி, அரியநாயகம்(பாரிஸ்) ஆகியோரோடு தலைமைப் பேருரைக்காக அழைக்கப்பெற்ற இலங்கையின் நாடகப் பேரா.சி. மௌனகுருவும் தமிழ்நவீன நாடக இயக்கத்தின் தவிர்க்கமுடியாத ஆளுமைகள். இந்தப் பட்டறைகளையும் விழாவையும் விருதுகளையும் தொடர்ச்சியாகச் சாத்தியப்படுத்தி வரும் பார்த்திபராஜாவும் அவருக்கு இந்த வாய்ப்பை உருவாக்கித் தரும் திருப்பத்தூர் தூய நெஞ் சக்கல்லூரியின் நிர்வாகமும் பாராட்டுக்குரியவர்கள். அக்கல்லூரி நினைத்தால் தமிழ்நாட்டில் சமூக நிகழ்வுகளை - விளக்கங்களை, விமரிசனங்களை - கலையின் எல்லைக்குள் நின்று பேசும் அரங்கியலாளர் திரளை உருவாக்கி அனுப்ப முடியும். அதற்கான வளாகச் சூழலும் மனிதவளத்தை ஒருங்கிணைத்துச் செயல்படத் தூண்டும் வாய்ப்பும் கொண்டதாக இருக்கிறது.

### பறக்கவிட வேண்டிய பலூன்

தூத்துக்குடி கலவரங்களால் விரட்டியடிக்கப்பட்ட மக்கள் திரளைத் தொலைக்காட்சிகள் காட்டிக் கொண்டிருந்தன. திட்டமிட்ட படுகொலை, அரச பயங்கரவாதம் எனச் சமூக ஊடகங்களின் பதிவுகள் கோபங்காட்டிக் கொண்டிருந்தன. தென் மாவட்டங்களான தூத்துக்குடி, திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களுக்கு இணைய வசதியும் சமூகப் பதிவுகளும் மறுக்கப்பட்ட சூழலில் அங்கிருந்து கிளம்பி கோவைக்கு வந்தேன். வரும்போது எனது நினைவுக்குள் ஞாநி எழுதிய நாடகத்தின் காட்சிகள் நிகழ்ந்துகொண்டே இருந்தன. அந்த நாடகத்தை மதுரை நிஜநாடக இயக்கம் - தமிழ்நாடு மக்கள் சிவில் உரிமைக் கழகத்தின் நிதி திரட்டலுக்காக - மேடையேற்றியபோது கோபம்கொண்ட கவிஞர் சத்தியனாக நான் நடித்திருந்தேன். முடிந்தபின் அப்போது சிவில் உரிமைக் கழகத்தின் மதுரைப் பொறுப்பாளராக இருந்த ஹென்றி திபாங்கே நாடகக் குழுவினரைத் தனியே அழைத்துச் சென்று தேநீர் வாங்கிக் கொடுத்துவிட்டுத் தாழ்ந்த குரலில் சொன்னார். "உங்களைத் தேடி ரகசியப்போலீஸ் நாளைக்கோ அதற்கடுத்த நாளோ வரலாம்; நீங்கள் நாடக நடிகர் என்று மட்டும் காட்டிக்கொண்டால் போதும்" என்பதாக யோசனை சொல்லிவிட்டுப் போனார். ஒருவாரம் வரை காத்திருந்து பார்த்தும் ஒருவரும் வரவில்லை. ரகசியப் போலீஸ் வேறு வேலைகளில் ஈடுபட்டு மறந்துவிட்டார்கள்.

கோவையிலிருந்து திருப்பத்தூருக்குப் போய் நாடகங்கள் பார்க்கவேண்டும். நினைவில் ஓடிக் கொண்டிருந்த நாடகப் பிரதிகள் இரண்டு. அபத்த நாடகத்தின் ஆகச் சிறந்த நாடகப் பிரதியான அயனெஸ்கோவின் 'காண்டாமிருகம்' முதலாவது; ஞாநியின் 'பலூன்' இரண்டாவது பெங்குவின் வெளியீடான 'ஓபன் ஸ்பேஸ் ப்ளேஸ்' தொகுப்பிலிருக்கும், 'தி சிகாகோ கான்ஸ்பிரசி' தந்த உந்துதலில் உருவாக்கப்பெற்ற பிரதி ஞாநியின் 'பலூன்'. போராட்ட மனம் கொண்ட பத்திரிகையாளராக அறியப்பெற்ற ஞாநி 1981இல் எழுதி வெளியிட்ட 'பலூன்' நாடகத்தை அதே ஆண்டு ஆகஸ்டு 25இல் சென்னை மியூசியம் தியேட்டர் அரங்கில் மேடையேற்றினார். மதுரை நிஜநாடக இயக்கம் 1982இல் மேடையேற்றியபோது நாடகாசிரியர் ஞாநி பார்வையாளராக வந்திருந்தார். நாடகத்தின் முடிவில் நடந்த மக்கள் உரிமைக் கழகத்தின் கூட்டத்தில் உரையாற்றியபோது ஞாநி, "இந்த நாடகம் என்னுடைய நாடகமல்ல; இது நிஜநாடக இயக்கத்தின் - மு.ராமசுவாமியின் - நாடகம்" என்றார். காரணம் அவரது பலூனின் முழுப் பிரதியையும் நிஜநாடக இயக்கம் நிகழ்த்தவில்லை. ஆனால், ஞாநி, தனது 'பலூன்' நாடகப் பிரதியைப்





பலமுறை தனது பரிக்ஷா குழுவினரைக் கொண்டு மேடையேற்றியிருக்கிறார்.

அவரது மறைவுக்குப் பிறகு பரிக்ஷா குழுவிற்காக ஞாநியோடு இணைந்து உதவி இயக்குநராகச் செயல்பட்ட அற்புதன் விஜயன் திருப்பத்தூர் நாடகவிழாவிற்காக இயக்குநராகப் பொறுப்பேற்றுள்ளதாகச் 'சிற்றேடு' சொல்லியது. அற்புதன் விஜயனின் மேடையேற்றம் ஞாநியின் மேடையேற்றங்களைவிடக் கச்சிதமாகவும் வீரியத்துடனும் வெளிப்பட்டது. ஏறத்தாழ இரண்டு மணிநேரம் நிகழ்ந்த பலூனைப் பார்த்து முடித்தபின் அதன் மேடையேற்றச் சிறப்புகளைப் பேசவேண்டும் என்று தோன்றியதைவிட, அந்நாடகத்தின் நிகழ்காலப் பொருத்தப்பாட்டைச் சொல்லவேண்டும் என்று தோன்றியது.

தமிழகத்தைக் கடந்த ஓராண்டாகப் போராட்டங்களின் நிழல் கவிழ்ந்து மூடிக்கொண்டே இருக்கிறது. ஜல்லிக்கட்டுப் போராட்டத்தைத் தூண்டிவிடும் அமைதியாக வேடிக்கை பார்த்த அரசு எந்திரம் திடீர் திருப்பமாக எதிர்நிலையை மேற்கொண்டது. எந்த முடிவும் இல்லாமல் களைய மறுத்தவர்களைக் கோபமூட்டும் வகையில் தடியடி நடத்திக் கண்ணீர்ப்புகை வீசி விரட்டியது. காவல்துறையினரைக் கொண்டே தீவைத்துக்கொண்டு, மக்களைப் பயங்கரவாதிகள், சமூகவிரோதிகள் என முத்திரை குத்தித் தண்டித்தது. இந்தத் திசை திருப்பலும் முத்திரைக் குத்தலும் நீட் எதிர்ப்புப் போராட்டத்தின் மீது அதிகமானது. காவிரி மேலாண்மை வாரியத்திற்கு, நெடுவாசலில் நீண்டு தூத்துக்குடி ஸ்டெரிலைட் போராட்டத்தின்போது கொடுங்கனவாய் மாறிப்போய்விட்டது. 13 பேர் போலீஸ் சுட்டதில் செத்திருக்கிறார்கள்.

சேலம் - சென்னை எட்டுவழிச் சாலையைப் பற்றிப் பேசினாலே கொடிய காண்டாமிருகமாய்க் கனவில் வந்து விரட்டுகிறது காவல்துறை. இப்போதைய நிலையில் மக்களோடு கலைவடிவத்தின் வழியாக உரையாட விரும்புபவர்கள் அயனெஸ்கோவின் காண்டாமிருகத்தையும் பலூனையும் தேர்வுசெய்யலாம் என்றாலும், 'பலூன்' ஆகப் பொருத்தமான ஒன்று என்று பரிந்துரைக்கிறேன்.

மெலிதான மாற்றுக்குரல்களைக்கூடச் சகித்துக்கொள்ளாமல் தேசவிரோதிகள், சமூக விரோதிகள், வளர்ச்சிக்கு எதிரானவர்கள் எனக் கட்டம் கட்டும் சூழல் நிலவுகிறது. அப்படிக் கட்டம் கட்டும் சூழலில் அரசு எந்திரங்களான காவல்துறையும் நீதிமன்றங்களும் எப்படிச் செயல்படும் என்பதை வெளிப்படையாக விமரிசிக்கும் பிரதி 'பலூன்'. அப்பிரதியில் வெளிப்படும் ஒரே நம்பிக்கைக் குரல் பத்திரிகையாளரின் குரல் மட்டுமே. பத்திரிகையாளர் ஞாநி செயல்பட்ட காலம் இப்போது இல்லை. அவரைப்போல பத்திரிகை முதலாளியைப் பகைத்துக்கொண்டு வெளியேறும் தனிமனிதர்களின் மனச்சாட்சியைப் பயன்படுத்திக்கொள்ளும் இன்னொரு ஊடகத்தை இப்போதைக்கு அடையாளம் காட்டவும் முடியாது. ஒட்டுமொத்தச் சூழலும் நம்பிக்கை தருவதாக இல்லை என்பதே நிலை. இந்தச் சூழலில் திரும்பத் திரும்ப மேடையேற்ற ஒரு நாடகப் பிரதி அல்லது அரங்கேற்றப்பட்ட நாடகம் என்றால் பலூனே பொருத்தமானதாக இருக்கும்.

#### நாடகக் கலை: ஆய்வுகளும் அடிப்படை நூல்களும்

நவீன அரங்கியலின் பயணங்களைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தபோது தமிழில் நாடகக் கலையைக் கற்பிப்பதற்கான அடிப்படையான நூல்கள் இல்லை என்ற உண்மையும் வந்துபோனது. தமிழை இயல், இசை, நாடகம் எனப் பிரித்துப் பேசும் நாம் அவற்றை முறையாக கற்றுக்கொள்ளத் தேவையான அடிப்படை நூல்களை உருவாக்கியிருக்கிறோமா என்ற கேள்வியும் எழாமல் இல்லை. தொல்காப்பியம் போன்றதொரு இயல் தமிழ் வரைவிலக்கண நூலை, அதன் அர்த்தத் தளங்களில் கற்பிக்காமல் கைவிட்ட பெருமையுடையது தமிழ்க் கல்வியுலகம். இசைத் தமிழுக்கும் நாடகத் தமிழுக்கும் அப்படியான நூல்கள் தேவை என்பதைக்கூட உணர்த்த முடியவில்லை.

நாடகப் பிரதிகளைப் பகுப்பாய்வு செய்து கற்பிப்பதற்கும் கற்பதற்கும் விரிவான அடித்தளங்களைப் போட்டுத்தரும், போலந்து நாட்டு நாடகப் பேராசிரியர் லாஜோஸ் எக்ரியின் 'நாடகப் பனுவலை உருவாக்கும் கலை' (The Art of Dramatic Writing - Logos Egri) போன்றதொரு நூலைத் தமிழில் எழுதவேண்டும் என்ற ஆசை தோன்றித்தோன்றி மறைந்துகொண்டே இருக்கிறது. பேரா. சே. ராமானுஜனின் மேடைத்தள அனுபவங்கள், அரங்கியலின் அனைத்துக் கூறுகளையும் பேசினாலும் ஆங்கிலத்தில் இருக்கும் நவீன நாடகச் செயல்பாடுகள்





(Modern Theatre Practice: Theory And Practicals *)* என்ற நூல் தரும் விவரங்களையும் புரிதல்களையும் தராமல் போவது ஏன் என்ற கேள்விகளும் எழுகின்றன.

இந்த நிலையில் என் கைக்குவந்த இலங்கையைச் சேர்ந்த பல்கலை வித்தகர் விபுலானந்த அடிகளின் மதங்க சூளாமணியின் புதிய பதிப்பு ஒரு சிந்தனையைத் தோற்றுவித்தது. ஐரோப்பிய நாடக கலையையும் பரதரின் நாட்யசாஸ்திரத்தையும் முறையாகவும் ஆழமாகவும் கற்ற பரிதிமாற்கலைஞர், விபுலானந்தர் போன்றோரின் நாடகவியலையும், மதங்க சூளாமணியையும் அப்படியே பதிப்பதோடு இன்றைய மாணாக்கர்கள் வாசிப்பதற்கேற்ப புதிய உரைநடையில் மாற்றி எழுதிப் பதிப்பிப்பதும்கூடத் தேவை என்று தோன்றியது. பயன்பாட்டு நோக்கில் அப்படியான நூல்கள் அவசியம்.

விபுலானந்தரின் 'மதங்க சூளாமணி', லாஜோஸ் எக்ரியின் நூலைப் போல உலக நாடகங்கள் பலவற்றையும் பகுப்பாய்வுக்குரியதாகக் கொள்ளவில்லை என்றாலும், சேக்ஸ்பியரின் முக்கியமான நாடகங்களைப் பகுப்பாய்வு செய்து நாடகப் பிரதியாக்க முறைமையைக் கற்றுத் தருகிறது. இதனோடு சேர்ந்து பண்டிதமணி மு.கதிரேசனாரின் 'மண்ணியல் சிறுதேர்' நூலுக்கு எழுதிய முன்னுரையையும் மாற்றித் தரவேண்டும். அதேபோல பரிதிமாற்கலைஞரின் நாடகவியலையும் மாற்றி எழுதவேண்டும். இந்த எண்ண ஓட்டத்தின்போது கவி தமிழச்சியின் அரங்கியல் பங்களிப்பு குறித்தும் நினைவுகள் தோன்றின.

கவி. தமிழச்சி தங்கபாண்டியனின் முதன்மையான



விருப்பங்களும் அடையாளங்களும் ஒன்றுக்கு மேற்பட்டவை. ஆங்கிலத்திலும் தமிழிலும் அற்புதமாக உரையாற்றும் பேச்சாளர், நடனக்காரி, நாடக நடிகை என்பதாக அறியப்பெற்ற அவர் நாடகக் கலையைப் பற்றிய தீவிர ஆய்வையும் செய்தவர். ஆங்கிலத்துறையில் ஆசிரியராக இருந்த சுமதி என்ற தமிழச்சி தனது ஆய்வுக்கான பொருண்மையாக எடுத்துக்கொண்டது, பின்காலனிய ஆங்கில இலக்கியம். எர்னெஸ்ட் தளையசிங்கம் மக்கென்ராயர் என்ற ஆஸ்திரேலிய நாடக ஆசிரியர் - அவரை ஆஸ்திரேலிய நாடகாசிரியர் என்பதைவிடப் பின் காலனிய ஆங்கில இலக்கிய ஆசிரியர் என்பதே பொருந்தும் - வெளிப்பாட்டு மொழியாக ஆங்கில மொழியைக் கொண்டிருந்தாலும், எழுதப்படும் வெளியாகக் காலனியாக்கப்பட்ட நாடுகளின் நகரங்களும் கிராமங்களுமாகவே இருக்கின்றன. இலங்கையின் கொழும்பு நகரமும் யாழ்ப்பாணத்துக் கிராமப் பகுதியையும் எழுதும் அவர், ஆங்கிலத்தின் வழியாகக் காலனியாதிக்கத்தில் கீழ் வாழ்ந்த மனிதர்களின் வாழ்க்கைச் சிக்கலை - தன்னிலையை வெளிப்படுத்தியுள்ளார். தனிமனிதத் தன்னிலையை எழுதத் தொடங்கி, அவர்களை - தேசிய அடையாளம், தேசியஇன அடையாளம், உலகத்தின் நிகழ்காலப் போக்கிற்குள் - நவீனத்துவ நெருக்கடிக்குள் உழல்பவர்களாக எழுதிக்காட்டியுள்ளார். அவரைக் குறித்த ஆய்வு நாடகவியல் கல்விக்கு ஒரு மாதிரி ஆய்வாக அமையத்தக்கது.

இலங்கையிலிருந்து ஆஸ்திரேலியாவிற்குக் குடிபெயர்ந்த - புலம் பெயர்ந்தவர் அல்ல - ஏனெஸ்ட் தளையசிங்கம் மெக்கன்ராயரின் நாடகங்களை ஆய்வுசெய்து ஆங்கிலத்தில் பட்டம் பெற்றுள்ளார், தமிழச்சி. அந்தப் பட்டத்திற்கான ஆய்வேட்டைத் தமிழின் முக்கியமான மொழிபெயர்ப்பாளர் சா. தேவதாஸ் 'இருள்வெளி' என்ற பெயரில் வெளியிட்டுள்ளார். அதையும் திரும்பவும் எளிய நடையில் எழுதித் தருவதின் மூலம் நாடகக் கல்விக்கான அடிப்படை நூல்கள் சிலவற்றைத் தந்த திருப்தியைப் பெறமுடியும் என்று தோன்றியது. ●

அ. ராமசாமி <ramasamytamil@gmail.com>

# மனம் மனம் மனம்
# முயல் முயல் முயல்

ஷங்கர்ராமசுப்ரமணியன்
ஓவியம்: ஆர்.பி. பாஸ்கரன்



1

ஞாயிற்றுக்கிழமையொன்றின்
இந்தக் காலைவேளை
சந்தோஷம் துக்கம்
இரண்டு சாத்தியப் பாதைகளை
ஒளியோடு எனக்கு அருளியுள்ளதாக
மனம் சொன்னது
இரண்டு பாதைகளில்
ஒன்றை நானே தேர்ந்தெடுக்க
கடவுளால் வழங்கப்பட்டிருந்த

பளபளப்பான மெனு கார்ட் அது.
Y-யின் முனை போன்ற நிழல் சாலை அதில்
இறங்கி நடந்தேன்
விழும்போது வடிவம் மாறும்
சரக்கொன்றை
மரத்துக்குக் கீழே
ஒரு முயல் பொம்மையைப் பார்த்தேன்
காதுகள் உயர்ந்த
கண்கள் சிரிக்கும்
இரண்டு முன்பற்கள் வெளித் தெரியும்
விரலளவே உடல் கொண்ட
சாம்பல் நீல பிளாஸ்டிக் முயல் அது.
அதன் இடது கன்னத்திலும்
வலது கண்ணுக்கு மேலும்
இடது முட்டியிலும்
வட்டம் செவ்வகம் சதுரத்தில்
பிளாஸ்திரிகள் ஒட்டப்பட்டிருந்தன
பிளாஸ்திரிகளை அனிச்சையாக உரிக்கத் துவங்கினேன்
அப்போதுதான் உரைத்தது
அந்தப் பிளாஸ்திரிகளும்
முயலின் அங்கம்தான்
உரிக்காமல் விட்ட பிளாஸ்திரிகளுடன்
முயலைப் பார்த்தேன்
அது காயம்பட்ட முயல்
அதில் காயம்பட்ட என்னைப் பார்த்தேன்
எனது பிளாஸ்திரிகளைப் பார்த்தேன்
அவனுக்குக் காயம்பட்ட முயல் வீரன் என்று பெயர் வைத்தேன்
எனது சட்டைப் பாக்கெட்டுக்குள்
வீரனைப் போட்டுக் கொண்டு
நெஞ்சுயர்த்தி நடந்தேன்.

2

மனம் மனம் மனம்
முயல் முயல் முயல்
சாம்பல் முயல் சாம்பல் முயல் சாம்பல் முயல்
காயம்பட்ட சாம்பல் முயல் காயம்பட்ட சாம்பல் முயல்
முயல் வீரன் முயல் வீரன் முயல் வீரன்
காயம்பட்ட வீரனே காயம்பட்ட வீரனே காயம்பட்ட வீரனே
நல்ல பாதை நல்ல கணமென்று ஏதுமுண்டா
சந்தோஷத்தின் பாதை துக்கத்தின் பாதை
என்று எதுவும்
தனியாக உண்டா
முயல் வீரனே.

3

சிவன் தண்டீஸ்வரனாக ஆலயம் கொண்ட
வேளச்சேரியில்
இன்னும் பழமை மிச்சமிருக்கும்
சீதாபதி நகரின் பிரதான சாலை அது.
மழை பெய்த கோடை நாளொன்றுக்கு
அடுத்த நாள் காலை
பாதி பூக்களைக் காலடியிலேயே
உதிர்த்து நின்ற
சரக்கொன்றைக்குக் கீழே
குட்டி அரைக்கால் டிரவுசரில்
நடைப்பயிற்சிக்கு
வந்திருந்த
நெடிய யுவதி
நின்று புகைப்படமெடுத்தாள்
சிவந்த தேகத்தை அவள் இந்தக் கோடையில்
பழுப்பாக்கியிருக்க வேண்டும்.
எதிர்படும் போது
வழக்கமாக முகமன் கூறும்
பால்பாக்கெட் பெண்மணி
நான்
சரக்கொன்றை மரம்
அவள்
மட்டுமே சாலையில் நின்றிருந்தோம்
அவள் பிரிந்து கடந்தாள்
என்னால் இயலவில்லை
நான் அவளை மீண்டும் பார்க்க
பக்கவாட்டு சாலையில் நடந்தேன்
என்னைத் தடுத்து தடுத்து
தடுக்க இயலாமல்
அவள் வரும் சாலையின் நிழல் முனையில்
போய் நின்றேன்
பளிங்குஜாடியின் பளபளப்புடன் சுடரும்
சரக்கொன்றை பூக்களை எனக்குப் பிடிக்கும்



அதன் ஆங்கிலப் பெயர் லேபர்னம்
லேபர்னம் லேபர்னம் லேபர்னெம்
புகைப்படக் கலைஞர் அல்போன்ஸ் ராய்
வசிக்கும் தெருவின்
பெயர் லேபர்னம்
இந்த வேனில் பருவத்தில் தான் சென்னை முழுவதும்
சரக்கொன்றை மரங்கள்
நாங்கள் இங்கேதான் இருக்கிறோம் என்று கூப்பிட்டு
எனக்குத் தங்களைக் காட்டின
முடியப்போகும் இந்தக் கோடைக்கு
சரக்கொன்றை என்று பெயரிடத் திட்டமிட்டிருந்தேன்
அப்போது இவளை நான் பார்க்கிறேன்
அவள் அணிந்திருந்த காதொலிப்பானை அஞ்சி
ஹலோ என்றேன்
அவள் தயக்கமின்றி நின்று செவிகொடுத்தாள்
அவள் படமெடுத்தது சரக்கொன்றை என்றேன்
ஆங்கிலத்தில் அதன் பெயர் சொன்னேன்
தலையசைத்தபடி பரிவுடன் கேட்டாள்
கோடையில் மலரும் பூ
புலம்பெயர்ந்த தாவரமாக இருக்கலாமென்று
சொல்லி விலகினேன்
அவள்தான் சரக்கொன்றை
கோடை அனலும் என் கணம் தோறும்
அவளைக் கடந்து கொண்டிருப்பவன் நான்.

4

பூனை எலியை உண்கிறது
பூனை எலியை வாசிக்கிறது
என்று விளங்கிக் கொள்ளலாமா
பூனை எலியைச் சாப்பிட்டு
ஏவ் என்று ஏப்பமிட்ட போது
பூனை எலியாகி விட்டது
எலி பூனையாகி விட்டது
என்று விளக்குவது சாத்தியம்தானா.
பூனைக்குள் எலி இல்லா விட்டால்
எலியை வெளியே அதனால்
அடையாளமும் காணமுடியுமா தோழர்களே. ●

**ஷங்கர்ராமசுப்ரமணியன்** <shankarashankara@gmail.com>

நினைவோடை

# மாய வேலி

வைதீஸ்வரன்
ஓவியம்: டெய்ஸி நாயுடு

எங்களுக்கு பள்ளி விடுமுறையென்றால் எங்கள் பெற்றோர் சொன்னது போல் நாங்கள் "அவிழ்த்துவிட்ட கழுதைகள்" தான்.

எனது பள்ளிப் பருவம் ஐம்பது அறுபது ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த சரித்திர முக்கியத்துவம் இல்லாத ஸ்வாரஸ்யமான வருஷங்கள். அப்போது கிரிக்கெட் தெருவுக்கு வரவில்லை. கோலிகுண்டு, கில்லித் தாண்டு, பம்பரம் அல்லது பக்கத்து செட்டியார் தோட்டத்துக் கிணற்றில் குடுக்கை கட்டிக் கொண்டு நீச்சல், ஆங்கங்கே தென்படும் செழுமையான கொய்யா மரங்களில் ஏறி அணிலுக்குப் போட்டியாக கிளைகளில் ஆடிப் பழங்களைப் பறித்துத் தின்பது அல்லது பக்கத்து ஊர்களில் இருக்கும் மாமா - அத்தை வீட்டுக்குப் போய் எதிர்கால வயதுக்கு [மிகவும்] உபயோகமான சில தகவல்களை தெரிந்துகொண்டு வருவது (அநேகமாக மாமா - அத்தை வீடுகளில் விளையாட்டுப் பொம்மை போல சின்னப் பெண்கள் இருப்பார்கள்!!) இப்படித்தான் எங்கள் விடுமுறை எங்களை பெரியவர்களாக்கும்!!

("இப்போது கைப்பேசியும் தொலைக்காட்சியுமே கதி என்று சோபாவில் கழுத்து வளைந்து சோர்ந்து கிடக்கும் பையன்களைப் பார்க்கும்போது மனம் அனாவசியமான வருத்தத்தால் ஊமையாகி விடுகிறது!)

அப்போது ஜெமினியின் 'சந்திரலேகா' ஓஹோவென்று ஓடிக் கொண்டிருந்தது. எம்.ஜி.ஆர் இன்னும் நட்சத்திரமாகவில்லை. நானும் ரகுவும் சந்துருவும் குப்பனும் - ராதா, ரஞ்சனாக - ஆளுக்கொரு முருங்கைக் குச்சியை வைத்துக்கொண்டு, கண்ட திசைகளில் ஆட்டிக்கொண்டு, கண்ணில் தென்பட்ட ஸ்டூல், பெஞ்சு, திண்ணை, வாசல் படிக்கட்டு, மூலையில் சாய்த்துக் கிடக்கும் அரிசி மூட்டை - இப்படி எதிலாவது ஏறிக் குதித்துக் கொண்டு, வாள் யுத்தம் புரிவோம். சில சமயம் உத்தரத்தில்கூட தொங்குவோம். எங்கள் ஆறு வயது சின்னத்தம்பி சுண்டு, "டாம் டீம்" என்று அதற்கு பின்னொலி கொடுத்து உற்சாகப்படுத்திக் கொண்டிருப்பான்.

அந்த மாதிரி ஒரு விடுமுறையில்தான் என் அத்தை பையன் பசுபதி காசியிலிருந்து வந்தான். அவனுக்கும் எங்களைப் போல் பத்து, பன்னிரண்டு வயது இருக்கும்.

எங்கள் உறவினர்களில் அவ்வளவு தூரத்தில் காசி போன்ற ஊரில் போய் குடியேறிய ஒரே அத்தை குடும்பம் அது ஒன்றுதான். அத்தைக்கு திருமணம் ஆன சில வருஷங்களிலேயே என் அத்தையின் கணவர் சாமியார்களைத் தேடிப் போக ஆரம்பித்துவிட்டார். அவரை ஓடி விடாமல் பிடித்து வைத்துக்கொள்வது அக்காலத்தில் பெரிய பாடாக இருந்திருக்க வேண்டும். பிறகு ஒருநாள் காசியில் சமுஸ்குருத வாத்தியாராக பணி செய்ய ஒரு பெரிய தெய்வபக்தர் இவரை அழைப்பதாகவும், தான் உடனே அங்கே போகப் போவதாகவும் ஒற்றைக் காலில் நின்றார், என் தாத்தா அவரை தடுக்கவில்லை. ஆனால், அவருக்கு சேவை செய்வதற்காக அவர் கைப்பிடித்த என் அத்தையையும் கூட அழைத்துப் போக வேண்டுமென்று அன்புக் கட்டளையிட்டார். அப்படித்தான் என் அத்தை குடும்பம் காசிக்குப் போய்க் குடியேறி, இப்போது பத்து வயதில் அவர்களுக்கு பசுபதியும் வளர்ந்து வருகிறான்.

காசியில் பிறந்து வளர்ந்ததால் பசுபதி பேசுவதைக் கேட்பதற்கே எங்களுக்கு சிரிப்பாக இருந்தது. நாலைந்து ஹிந்தி வார்த்தைகளுக்கு இடையில் இரண்டு தமிழ் வார்த்தை பேசுவான். அவன் இப்படி விசித்திரமாக பேசுவது அவனுக்குத் தெரியவில்லை. என் அத்தைதான் ஒவ்வொரு முறையும் அவன் பேசுவதை எங்களுக்கு மொழிபெயர்த்துக் கொண்டிருந்தார்கள்.

பசுபதி உச்சியில் சின்னக் குடுமி வைத்திருந்தான். அவன் வட்டக் கிராப்பைப் பார்த்தால் எங்களுக்கு சிரிக்கத் தோன்றும்.

காலையில் எழுந்தவுடன் முகம் கழுவி, நெற்றியில் விபூதி தரித்துக்கொண்டு ஸ்லோகங்கள் சொல்லிக் கொண்டிருப்பான். அப்போது நாங்களெல்லாம் கன்னா பின்னாவென்று அட்டகாசமாக ஆடிக் குதித்துக் கொண்டிருப்போம்.நண்பன் ரகு நன்றாக சிவப்பாக இருப்பான். அவனை எல்லோரும் டி.ஆர். ராஜகுமாரியாக பாவித்து, படத்தில் வரும் ரஞ்சனைப் போல் தூக்கிப் போட்டு வளைத்து சேஷ்டைகள் செய்து அழ வைத்து விடுவோம்.



பசுபதி இதையெல்லாம் புரியாத மிரட்சியுடன் பார்த்துக் கொண்டிருப்பான். உதடுகள் ஸ்லோகங்கள் சொல்லிக்கொண்டே இருக்கும். திண்ணையில் உட்கார்ந்து அடிக்கொரு தரம் கிழக்கைப் பார்த்து கன்னத்தில் போட்டுக்கொள்வான். அவன் ஒவ்வொரு செய்கையையும் அத்தை கண்காணித்துக்கொண்டே இருப்பாள். அவன் இப்படி செய்வதெல்லாமே அத்தையின் பல வருஷமாக பாடம்

பண்ணிய பழக்க வழக்கங்களாக இருக்கும்.

அவனை நாங்கள் விளையாடக் கூப்பிட்டால் வரத் தயங்குவான். பந்தைத் தூக்கி அவனிடம் எறிந்தால் அதைப் பிடிக்க முயற்சி செய்யாமல் பயந்து நகர்ந்து விடுவான். அநேகமாக அதற்குள் அவனை அத்தை கூப்பிட்டு விடுவாள். "பசூ, வாடா சந்தியாகாலமாச்சு. கோவிலுக்குப் போகணும்" என்று அவனை இழுத்துக்கொண்டு போய் விடுவாள்.

பசுவை நினைத்தால் எனக்கு பாவமாக இருக்கும். ராத்திரி தூங்கும்போதுகூட அவன் முகத்தைப் பார்த்தால் ஏதோ இருட்டுக்கு பயந்து கண்ணை மூடிக் கொண்டிருப்பது போல் தோன்றும்.

ஒரு நாள் இரவு நிலா வெளிச்சமாக இருந்தது. சாப்பிட்டவுடன், "வாடா பசு, வாசலில் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு கதை பேசலாம்" என்றேன்.

"பயமா இருக்குடா!" என்றான்.

"வாடா" என்று இழுத்துக்கொண்டு போனேன்.

வாசலில் தென்னை மரங்கள் ஆடிக்கொண்டு காற்று சுகமாக வந்து கொண்டிருந்தது. பசு என்னிடம் நெருங்கி உட்கார்ந்து கொண்டான்.

"பசு, டார்ஜான் கதை தெரியுமா?"

"தெரியாதுடா."

"நல்ல கதைடா! ஒரு காட்டுலே ஒரு குழந்தை தனியா கிடக்கறது. அவன் அப்பா அம்மா இரண்டு பேருமே பாம்போ ஏதோ கடிச்சு செத்துப் போயிடறாங்க்க!"

"அய்யோ, என்னடாது கதை இது?"

"ஆமாம். அப்புறம் கதை ரொம்ப நல்லா இருக்கும். அங்கே உள்ள பசு மாடு ஒண்ணு இந்தக் குழந்தைக்கு பாலு கொடுக்கும். பறவைகளெல்லாம் கனிஞ்ச பழங்களையெல்லாம் கொத்திக் கொண்டு வந்து இந்தக் குழந்தைக்கு ஊட்டும். இதையெல்லாம் சாப்பிட்டு டார்ஜான் நல்ல பலசாலியா பெரியவனா வளந்துடுவான். அங்கே உள்ள சிங்கக் குட்டியெல்லாம் இவன்கூட அன்பா ஸ்நேகிதமா பழகி விளையாடும். அவன் அதன் மேலே ஏறி சவாரி செய்வான். அம்பு வில்லெல்லாம் தோளில் மாட்டிண்டு மரங்களின் விழுதுகளைப் பிடித்துக்கொண்டு, "யாஹூ" என்று கத்திக்கொண்டு, தாவி காடெங்கும் சுற்றுவான். சிங்கத்துக்கு வேண்டிய இரையை வேட்டையாடி அவைகளுக்கு கொடுப்பான். சிங்கம் டார்ஜானை தன் உயிர் நண்பனா நேசிக்கும். பல சமயம் சிங்கங்கள் இவனைக் காப்பாத்தும்!

என்னடா பசு கதையைக் கேக்கறயா இல்லையா?" என்றேன், சட்டென்று நிறுத்தி.

பசு என் கதையை பாதிகூடக் கேடகவில்லை. "டேய், அந்த சுவத்துக் கட்டை மேலே பார்ரா. நீளமா பல்லி ஒண்ணு. பாக்க பயமா இருக்குடா!" என்றான். எனக்கு அவன் மேல் ஆத்திரமாக வந்தது.

"ஏன்னடா மண்டுவா இருக்கே! பல்லி ஒண்ணூம் பண்ணாதுரா!" என்றேன். அவன் என்னிடம் நெருங்கி உட்கார்ந்துகொண்டான்.

"சரி, .நீ இப்போ எனக்கு கதை சொல்லு!" என்றேன்.

பசு குரலை செருமிக் கொண்டும், "எனக்கு கதை ஒண்ணும் தெரியாதுடா! ஆனா எங்க ஊர்லே ஒரு சாமியார் இருக்கார்டா! அவர் பேர் ஷொம்புஜால் மகராஜ். அவர் மடத்துக்கு என்னை அம்மா அடிக்கடி கூட்டிண்டு போவா! அவர் பெரிய மகானாம். சாமி கிட்டே பேசுவாராம் அம்மா சொல்லியிருக்கா!" என்றான்.

"சரிடா, அவர் உங்கிட்டே பேசுவாரா?"

"எங்கிட்டே அல்லாம் பேசமாட்டார். ஆனா பெரிய பெரிய மனுஷா எல்லாம் கார்லே வருவா! அவா கிட்டே ஏதோ பேசுவார். காலித் தட்டை அப்படியே சுத்துவார். அதிலே நிறையா சில்லறைக் காசு வரும்! வெளிலே பிச்சைக்காரர்களுக்கு கொடுக்க சொல்லுவார்."

"சரி அப்புறம்."

"இல்லேடா! அதைவிட ஒரு அதிசயம் என்னன்னா, அவர் தினம் இமயமலையிலேருந்துதான் வராராம்! அந்த சிஷ்யர்கள் சொல்லுவா!"

"அப்படியா! ஆச்சரியமா இருக்கே! எப்படி தினம் அப்படி வரார்!"

"கேளூ, அந்தக் கூடத்துலே வாசலைத் தவிர வேற கதவே இல்லை. நான் நல்லாப் பாத்திருக்கேன். ஆனா சுவத்துக்குப் பின்னாலே இருந்து வருவார்."

"எப்படிடா வருவார்? விவரமா சொல்லு!"

"டேய் நீ நம்பமாட்டே! ஆனா சொல்றேன். நாங்க எல்லாரும் காத்துண்டிருப்போம். சிஷ்யாள் எல்லாம் சத்தம் போட்டு ஜபிச்சிண்டே இருப்பா. திடீர்னு மின்னல் மாதிரி ஒரு வெளிச்சம் கூடத்து பின் சுவர்லே வரும். உடனே சிஷ்யா திரையை மூடிடுவா. அப்பறம் இன்னொரு வெளிச்சம் வரும். அப்போ திரையை விலக்குவா! அங்கே ஷொம்புஜாலமகராஜ் அபய முத்திரையோட நின்னுண்டிருப்பார். சிஷ்யாள் எல்லாம் சொல்லுவா, இமயமலையிலேருந்து தரிசனத்துக்கு வந்திருக்கார்னு! நாங்க எல்லாரும் சாஷ்டாங்கமா சேவிப்போம். அம்மா என்னை நிறைய வேண்டிக்க சொல்லுவா! சில பேர் விக்கி விக்கி அழக்கூட செய்வாடா! எனக்கு பயமாக்கூட இருக்கும்!"

பசுபதி சொன்னது ஸ்வாரஸ்யமாக இருந்தது.

"டேய், நல்ல கதை சொல்றேடா! ஸ்வாரஸ்யமா இருக்கு!" என்றேன்.

"டேய், இது கதையில்லேடா. நெஜமா அவர் இருக்காரு" என்றான் பசு.

"சரி, எனக்கு கதை உனக்கு நெஜம். எனக்குத் தூக்கம் வருதுடா! நாளைக்கு இன்னும் நெறைய கதை சொல்லுடா!" என்று அவன் முதுகைத் தட்டிக்கொண்டு எழுந்தேன்.

"இல்லேடா இது நெஜம்" என்று முனகிக்கொண்டே அவனும் என்னைத் தொடர்ந்தான்.

மறுநாள் மாலை பசுபதியும் அத்தையும் ஊருக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார்கள். காலையில் எழுந்தவுடன் பசுபதிக்கு அந்த வித்தையைக்



காட்டிவிட வேண்டும் என்று எனக்கு இரவெல்லாம் பரபரத்தது.

காலையில் எழுந்து முகம் அலம்பிக்கொண்டவுடன் பசுவை அவசரமாகக் கூப்பிட்டேன். எதிர்த்த வீட்டு ரகுவையும் வரச் சொன்னேன்.

எங்கள் வீட்டுக்கு ஒட்டினாற்போல ஒரு காலிமனை இருந்தது. அதில் பின்புறம் கொஞ்சம் புதர் மண்டிக் கிடக்கும். அதை ஒட்டிய மாதிரி பின்புற எல்லையில் ஒரு மூங்கில் வேலி நட்டு வைத்திருப்பார்கள். நான் கூப்பிட்டவுடன் ரகுவும் பசுபதியும் அங்கே வந்துவிட்டார்கள்.

"ரகு, நான் இப்போ பசுபதிக்கு ஒரு மந்திர வித்தை காட்டப் போறேன். பசு பயப்படாம நீதான் பாத்துக்கணும்" என்று சொன்னேன். ரகுவுக்கு முதலில் கொஞ்சமாகப் புரிந்தது. பிறகு நன்றாகவே புரிந்துவிட்டது. "ஓ அதுவாடா!" என்று உரக்கக் கத்தினான். நான் "ஸ்ஸ்ஸ்" என்றேன்.

பசுபதி எதுவும் புரியாமல் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"பசு, நீ நேத்து சொன்ன சாமியார் கதையை நான் முதலில் நம்பவே இல்லைடா! ராத்திரி பூரா அதையே நெனைச்சிண்டிருந்தேன். அப்போ திடீர்னு அந்த ஷொம்புஜாலமகராஜ் என் கனாவிலே வந்து மிரட்டினார்."

"அய்யய்யோ!" என்றான் பசுபதி.

"ஆமாம், அப்பறம் அவர் கால்லே விழுந்து நமஸ்காரம் பண்ணி மன்னிப்புக் கேட்டேன். அவர் என்னை மன்னிச்சி ரொம்ப மனசு இறங்கி எனக்கு ஒரு மந்திரம் சொல்லிக் கொடுத்தார். அதை மந்திரத்தை நான் ஜபிச்சா நானும் அவர் போலவே மாயமா மறைஞ்சி பின்னால வெளிலே வருவேனாம். இப்போ நான் அது மாதிரி செஞ்சி காட்டப் போறேன், பாக்கறயா!" என்றேன்.

பசுபதிக்கு உடம்பெல்லாம் லேசாக நடுங்க்கியது. "டேய் நெஜமாவா?" என்றான் மெல்லிய குரலில்.

"ஆமாம், பாரு இப்போ அந்த ஜபத்தை சொல்லிண்டே அந்தப் புதருக்குள்ளே போகப் போறேன். நீயும் ஜபிக்கணும். அப்பறம் காணாம போயிடுவேன்."

"அய்யய்யோ. பயமா இருக்குடா!"

"பயப்படாதே! அப்பறம் அந்த சாமியார் எப்படி சொல்றாறோ, அப்படி வருவேன் பாரு!" என்று சொல்லி ரகுவிடம், "டேய் பசுபதி பயப்படாம பாத்துக்கோடா!" என்றேன்.

"மாவேலீ மாவேலீ மாவேலீ" என்று உரக்கக் கத்தினேன். பசுபதியையும் அந்த மந்திரத்தை விடாமல் கத்திக்கொண்டே இருக்க வேண்டுமென்று சொல்லிவிட்டு, எதிரே இருந்த புதருக்குள் ஓடி மறைந்துவிட்டேன்!

பசுபதி சிரத்தையுடன் மாவேலி மந்திரத்தைக் கத்திக்கொண்டே இருந்தான், ஒரு ஐந்து நிமிஷம் ஆகி இருக்கும். அவனுக்கு நான் எங்கே போனேன் என்றே தெரியவில்லை. ரகு இதை தமாஷாகப் பார்த்துக்கொண்டே சுற்றிப் பார்த்துக்கொண்டே இருந்தான்.

பசுபதிக்கு மந்திரத்தைக் கத்தி கத்தி தொண்டை வறண்டுவிட்டது. கொஞ்சம் பயமும் வந்துவிட்டது. அவன் ரகுவைப் பார்த்து, "என்னடா, புதருக்குள் போனவன் இன்னும் வரலை. பயமா இருக்குடா! எங்கேயாவது தொலைஞ்சி போய்டுவானா?" என்று கலவரத்துடன் கேட்டான்.

ரகு, "வந்துடுவாண்டா. நீ மந்திரம் ஜபிச்சியோல்யோ!" என்று சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது எதிர் வீட்டுத் திண்ணையில் நின்று கொண்டிருந்த நான், "டேய் பசுபதீ" என்று கத்தினேன். பசுபதி தன் கண்களை நம்பமுடியாமல் வாயடைத்து என்னைப் பார்த்துக் கொண்டிருந்தான். நான் அவன் அருகில் வந்து முதுகைத் தட்டினேன்.

"ஏப்படிடா, எப்படிடா இந்தப் புதருக்குள்ளே போய்ட்டு எதுத்த வீட்டுக்கு வந்தே! எப்படிடா?" என்று என் கையைப் பிடித்துக்கொண்டான்.

"இரு இரு. இப்ப மறுபடியும் பாக்கறயா?"

"மாவேலீ மாவேலீ. கத்து. கத்துடா கத்து" ஏன்று சொல்லிவிட்டு மறுபடியும் புதருக்குள் ஓடி மறைந்துகொண்டேன்.

பசுபதி இந்த முறை சற்று நம்பிக்கையுடன் கத்திக் கொண்டிருந்தான், ஐந்து நிமிஷம் கழிந்தது. என் வீட்டுப் பக்கவாட்டு ஜன்னல் வழியாக பசுவைப் பார்த்து நான் உரக்கக் கூப்பிட்டு பலமாக சிரித்தேன்.

பசுபதி இப்போது என்னை ஏதோ பிரமிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தான். பேச வரவில்லை. என்னை ஏதோ மாயப் பிறவியாக, சித்தனாக நினைத்துக் கைகட்டிக்கொண்டு நின்றான். எனக்கும் ரகுவுக்கும் சிரிப்புத் தாங்கவில்லை.



“என்னடா பசு, உங்க குரு ஷொம்புஜாலமகராஜ் எந்த மாதிரி வித்தையைக் கத்துக் கொடுத்திருக்கார் பாத்தியா?” என்றேன். அவன் பேசாமல் என்னை பயபக்தியுடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

பசு சாயங்காலம் ஊருக்குக் கிளம்பத் தயாராகிக் கொண்டிருந்தான். அவன் கிளம்பும் வரை என்னிடம் அதிகம் நெருங்கவில்லை. வித்தியாசமாக விலகி நின்றான். அத்தையிடம் மட்டும் மெதுவாக, “அம்மா, இந்த ராமு ஏதோ வித்தையெல்லாம் பண்றான். எனக்கு ஆச்சரியமா இருக்கு! எனக்கு ஏம்மா அது வரலே!” என்று கேட்டான். அத்தைக்கு அவன் சொன்னது சரியாகப் புரியவில்லை.

“ராமு ஏதாவது குறும்பு பண்ணுவாண்டா. எப்பவுமே அவன் அப்படித்தான்! குறும்புக்காரன்” என்று சொல்லிக்கொண்டே பெட்டியைப் பூட்டி வாசலில் வைத்துக் கொண்டிருந்தாள்.

அத்தையையும் பசுபதியையும் வழியனுப்ப ஸ்டேஷனுக்கு நானும்கூடப் போனேன். குதிரை வண்டியில் பசுபதியுடன் நெருங்கி உட்கார்ந்துகொண்டேன். அவனுக்கு சற்று சங்கடமாக இருந்தது.

நான், “பசு பசூ” என்று காதோடு கூப்பிட்டேன். அவன் ஏனோ சற்று விலகி உட்கார்ந்துகொண்டான்.

“டேய், ஊருக்கு போனா என்னை மறந்துடுவாயாடா?”

அவன் எனக்கு பதில் சொல்லாமல் கையைக் கட்டிக்கொண்டான்.

“டேய், ஏண்டா பேசமாடேங்கறே? என் மேலே கோவமா? ஏண்டா?” என்று அவன் கையைப் பிடித்துக்கேட்டேன்.

அவன் முனகிக்கொண்டே பேசினான். “போடா, ஒன்னைப் பாத்தா பயமா இருக்கு. நீ அந்த சாமியார் மாதிரி மந்திர மாயமெல்லாம் பண்றே.”

எனக்கு பலமாக சிரிப்பு வந்துவிட்டது. அத்தைக்குக் கேட்காமல் அடக்கமாக சிரித்தேன். குதிரை வண்டியின் சலங்கை சத்ததில் அது அதிகம் கேடகவில்லை. நான் பசுவிடம் மெதுவாக ரகஸியம் போல் பேசினேன். “ஏண்டா, என் மந்திர வித்தையைப் பாத்து பயந்துண்டயா? அதெல்லாம் தந்திரம்டா. சும்மா விளையாட்டுக்கு!”

“என்னடா சொல்றே?”

“ஆமாண்டா, அந்த புதருக்குள்ளே ஒடினேன் இல்லையா?”

“ஆமா, அப்பறம் எப்படீடா எதுத்த வீட்டுக்கு வந்தே?”

“கேளூ, அந்தப் புதருக்குள்ளே போனா அங்கே அந்த வேலிப் படலை நகர்த்தி பின்பக்கமா போக முடியும்! பின் பக்கத்துலே அங்கே ஒரு சின்ன ஓடை மாதிரி பள்ளம் இருக்கும். அதில தண்ணியே இருக்காது. அந்த ஓடைப் பள்ளத்தில் இறங்கித் தாண்டி அந்தப் பக்கம் போனா நம்ம வீட்டுக்கு பின்னால உள்ள தெருவுக்குக் போயிடலாம். அந்தத் தெருவுலே கொஞ்சம் நடந்து வளைஞ்சி வந்தா நம்ம தெருவுக்கு நம்ப வீட்டுக்கு வந்துடலாம். இதுதான் அந்த மேஜிக்!

நாங்க யாராவது புதுப் பையன் வந்தா அவனுக்கு இந்த வித்தையைக் காட்டி அழ வைச்சிடுவோம். இப்ப ஒன்னையும் அழ வைச்சுட்டோம். அட மண்டு, இது மாயமும் இல்லே மந்திரமும் இல்லே!” என்று சொல்லி அவனைக் கட்டிக்கொண்டேன்.

பசுபதிக்கு இப்படிப்பட்ட சாதுர்யம் மிகவும் நம்ப முடியாததாக இருந்தது. ஆச்சரியமாக இருந்தது. அநேகமாக இது அவன் ஆயுளிலேயே முதலாவதாக் கேட்ட கெட்டிக்காரத்தனமான தந்திரமாக இருக்கும்! அவன் சாதுவான எளிமையான மூளையால் அதை ஜீரணிக்க இன்னும் அவகாசம் தேவையாக இருந்தது.

பசுபதி ரயிலில் ஏறிக்கொண்டு ஜன்னல் ஓரம் கம்பியைப் பிடித்துக் கொண்டு என்னையே பார்த்துக் கொண்டிருந்தான். ரயில் நகர சில நொடிகள்தான் இருந்தன. “ப்போ, அந்த ஷொம்புஜால மகராஜும் இப்படித்தான் மேஜிக் பண்றாரா?” என்று பளிச்சென்று ஒரு கேள்வி கேட்டான். அதற்குள் ரயில் ஊதிவிட்டது. வண்டி நகர ஆரம்பித்து விட்டது.

நான் பலமாக சிரித்துக்கொண்டே பசுவுக்கு கையாட்டி தலையாட்டிக் கொண்டிருந்தேன். ரயில் மறைந்து கொண்டிருந்தது. அப்போது அவன் பிஞ்சு மனசுக்குள் படர்ந்திருந்த பல முள் வேலிகள் மெல்ல மெல்ல கழன்று விழுந்து பாதை ஒன்று தெரிய ஆரம்பித்திருக்கலாம். ●

வைதீஸ்வரன் <vydheesw@yahoo.com>